REGISTERED—No. M. 108.

"His Royal Highness desires me to express to Mr. Swaminatha Aiyar his best thanks"—Sir Francis (now Lord) Knollys.

Vol. XVIII.] NOVEMBER 1910. [No. 8.

லேசான காகிதப் பதிப்பு.
தனிப்பிரதி, 5 அணா.
பழைய பிரதி, 6 அணா.

சந்தா விலை விபரம்.
ஒரு வருஷத்திற்கு ரூ. 4.
ஆறுமாதத்திற்கு ,, 2-2.




அறிவைப் பரவச் செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப்பத்திரிகை.

**DEVOTED TO PRACTICAL TRUTH AND KNOWLEDGE.**

அறிவுடையார்ரெல்லாமுடையாரறிவிலா ரென்னுடைய ரேனுமிலர்.-திருக்குறள்.

A POPULAR NEW REVIEW AND TAMIL MONTHLY, ESTD. MAY, 1892.

கற்க கசடறக் கற்பவை கற்றபி னிற்க வதற்குத் தக.—திருக்குறள்

ILLUSTRATING THE PRINCIPLES OF EDUCATION, PSYCHOLOGY, SOUL-CULTURE & ETHICS.
**ADAPTED FOR USE IN HOMES & SCHOOLS.**

["Hitch Your Wagon to a Star"—Emerson.]

CONTENTS.



அட்டவணை.



["Our Theism is the Purification of the Human Mind"—Emerson.]

Thick Paper Edition for Patrons.] [Minimum Subscription Rs. 5.
[Overland 8 Annas extra.

PUBLISHED BY
**THE SECRETARY, DIFFUSION OF KNOWLEDGE AGENCY,**
*Lalitalaya, Mylapore, Madras, S.*
**For the Viveka Chintamani Publishing Committee.**

Overland 8 Annas extra.]

Thin Paper Edition for the people.] [Subscription Price: Yearly Rs. 4.



*Like a spider, like the earth, and like a living creature He produces the Universe."—Sruti.*

# THE VIVEKA CHINTAMANI.

ESTABLISHED 1892.

The Oldest and the Best Tamil Monthly: Yearly Rs. 4.

Thick Paper Edition Rs. 5. in Advance.

Subscriptions registered by Volume only and cannot be discontinued in the middle of a Volume.

**EDITOR**
**C. V. Swaminatha Aiyar.**

LALITALAYA, MYLAPORE.
*Madras, S. Septr. 1910.*


## விவேகசிந்தாமணி.

வருஷசந்தா ரூ. 4, வாலியம் கணக்காகவே சந்தா பதிவுசெய்யப்படும்.

### விவேகசிந்தாமணிக் கமிட்டி விண்ணப்பம்.

ஆரிய சகோதரர்களே! விவேகசிந்தாமணி, இப்பொழுது மாதந்தோறும் ஒழுங்கா வெளியாகி வருகிறது. ஸாதாரண வருஷ முதல் மிகவும் அருமையான விஷயங்களெல்லா வெளியாகிவருகின்றன. ஸித்தர்கள் ஸாதநமுறை, யோகம், பக்தி, ஞானம் முதலான ஸாத முறைகள் உபநிஷத் வாக்கியார்த்தம் இவை வெளியாகிவருகின்றன. விவேகசிந்தாமண யென்ற பெயர்க்கேற்றபடி இதில் விவேகத்தை விளைவிக்கக்கூடிய அற்புத விஷயங்கள் நிறை திருக்கும். இக்காலத்துக்கேற்றபடி தேசாபிமானம், பாஷாஞானம், நீதி போதம், வேதாந் சாரம், சுதேச விதேச சரித்திரங்கள், மஹாத்மாக்களின் அமிருத வசனங்கள் பகவான் அர்ச்சுனனுக்குப் போதித்த நித்தியானுகூல ஸாதனங்கள், அப்போதப்போது நடக்கும் விசே ஸம்பவங்கள், ஆகிய இவைகள் அடங்கப்பெற்றுச் செந்தமிழ் நடையில் எழுதப்பட்டுத் தமி நாடெல்லாம் ஜ்வலித்துவருகிறது. இம்மாதாந்தப் பத்திரிகைக்கு ஒவ்வொருவரும் சந்தாதா ராகச்சேர்வதுடன் தங்கள் நேசர்களுக்கும் காட்டி அவர்களையும் வாங்கும்படிசெய்து ஆதரித் வரக்கோருகிறோம். மனிதர்களுக்கு உய்யும்வழிகாட்டி அவர்களைக் கடைத்தேறச் செய்யு உண்மையான ஸத்குருவைப்போல விவேகசிந்தாமணியை வாசிப்பவர்களுக்கு அது உற்றவிட துதவியாய் நின்று விவேகத்தை வளர்க்கும் குருவாய்த்தோற்று மென்பதிற் சிறிதும் சந்தே மில்லை. பத்திரிகையை முழுதும் படித்துக் கையொப்பக் காரர்களாய்ச் சேரவும், இதரர்களையு அப்படியே சேரும்படி செய்யவும் கேட்டுக்கொள்கிறோம். இப்பத்திரிகையை வாங்கி வாசி போர் இகபர சாதனங்களிரண்டிலுந் தேறிப் பெறு வாழ்வெய்துவர். சன்மார்க்க சாதனமா பத்திரிகையென்றும் விவேக விருத்திக்கின்றியமையாததென்றும் அனேகர் அதை ஆதரித்து கொண்டாடிவருகிறார்கள். பத்திராசிரியருக்கும் பத்திரிகைக்கும் அர்பத்நட் கம்பெனி முழுகி போனதில் நேர்ந்த பெரு நஷ்டத்தால் செலவுக்குவேண்டிய அளவே காபிகளச்சிடப்படுவதா வேண்டுவோர் உடனே யெழுதிப் பெற்றுக்கொள்ளவேண்டும்.

**1910ஸ்ரீ ஏப்ரல் - மே முதல் 18-வது வால்யம் ஆரம்பம்.**

சி. வி. ஸ்வாமிநாதய்யர்.
பத்திராசிரியர்.

எம். கே. நாராயணஸ்வாமி ஐயர், பி-ஏ., பி-எல்.
விவேகசிந்தாமணிக்கமிட்டி காரியதரிசி

### ORDER FORM.

ஐயா,

Please enrol me as a Subscriber and send the Vivekachintamani by V. P. P. for a year's subscription, viz, Rs. 4-1-0.

ஐயா, விவேகசிந்தாமணிக்கு என்னையும் ஒரு சந்தாதாராகச் சேர்த்துக்கொண்டு முதல் சஞ்சிகையை ஒரு வருஷ சந்தா ரூபா 4-1-க்கு V. P. P. மூலமாக அனுப்பக் கோருகிறேன். தவறாமல் தபாலாபீஸில் பணம் கட்டிப் பெற்றுக்கொள்கிறேன்.

பேர், தொழில், ஊர் விலாசம், போஸ்ட் இவைகளை கண்டெழுதவும்.

☞ தனிப்பிரதி ஒற்றைச்சஞ்சிகையானால் அணா $5\frac{1}{2}$, இரட்டை சஞ்சிகையானால் அணா 10 அனுப்பவும்.

*"Give me not O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief, that seeing evil I yet have faith."*

*"Seek Truth wherever you can find it." But,*

*"Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

"HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF BE TRUE."




*அன்பேயவன்: அறிவேசக்தி: ஓம் தத்ஸத்.]* [God is Love: Knowledge is Power: *Aum*

ஸத்யமே ஜெயம்—**SATYAMEVA JAYATI.**

புத்தகம். 18.] 1910ஆு நவம்பர்மீ, சாதாரணஆு கார்த்திகைமீ [சஞ்சிகை. 8.

# HARISCHANDRA=THE MARTYR TO TRUTH.

## (*A New Version.*)*

"Truth is Supreme; that which is Supreme is Truth; on Truth the Universe is based. Think Truth, Speak Truth Act Truth".—*Taittiriyopanashad.*

"The episode of Harischandra is one of the greatest and most valuable possessions of ancient Indian Ideal. I have attempted......to present in modern dramatic form to my countrymen of the Tamil land.........I have......attempted to give the story a somewhat new setting......The story, it struck me, as told in our books, as handed by tradition or as acted in the street or the stage, almost borders on the burlesque.........There is no real tragedy in mere physical or even in mental suffering, character can only be overcome by itself, and the consummate tempter is a casuist.........In a word my object has been to present the story in a modern form. Primeval art, it will be remembered, mostly delighted in mass and number. Complexity of conception and subtlety of suggestion were foreign to it. I confess to having consciously attempted to modify the story in details, but whether the modification has been an improvement it is not for me to discuss."—*Extracts from the author's preface.*

* A Drama in Tamil by S. Bavanandam Pillai, F. R. H. S. (Lond.) and M. R. A. S. (Lond.) Demy 8vo pp. xxxviii—341, with frontispiece of the author. S. P. C. K. Press, Madras. Ordinary edition (paper cover) Rs. 2.

# சத்தியவாக்கு அரிச்சந்திரன்.*

## "சத்தியம்வத: தர்மம்சர"

"பதியிழந்தனம் பாலனை யிழந்தனம் படைத்த
நிதியிழந்தன மினி நமக்குளதென நினைக்குங்
கதியிழக்கினுங் கட்டுரை யிழக்கிலே மென்றான்
மதியிழந்து தன் வாயிழந்தருந்தவன் மறைத்தான்."—அரிச்சந்திரபுராணம்.

"மநஸ்யேக வசஸ்யேக கர்மண்யேக மஹாத்மநாம்
மநஸ்யந்யத் சவஸ்யந்யத் கர்மண்யந்யத் துராத்மநாம்."



சத்திய வாக்கு அரிச்சந்திரனும் அயோத்தி மன்னன் கதையைக் கேட்டுக் கரைந்துருகாதார் இல்லை. "சத்தியமேசதம்" என்பதையும் "சத்தியமே ஜயம்" என்பதையும் காரியவுலகில் வற்புறுத்திக் கூறுவான் புராணவாயிலாகப் பெரியோரால் போதிக்கப் பட்டதோர் உண்மையுணர்த்தும் உத்தமக்கதை அரிச்சந்திர புராணம் என்பது எல்லாரும் அறிந்த விஷயம். உண்மையை யுணர்த்த வேண்டில் உள்ளதை யுள்ளபடி யுரைக்கவேண்டும். ரிஷிகள் ஸ்தூல சூக்ஷ்மகாரண மென்னும் மூவகைத் தோற்றமாம் திரிலோகத்தையும் அறிந்தவர்களாதலால், அவர்கள் பிராகிருத தர்மங்கள் அனைத்தையும் நன்குயறிந்தவர்களா மென்பது சொல்லாதே அமையும். அப்படிப்பட்டவர்கள் சத்தியத்தையே லக்ஷியமாகக் கொண்டுள்ள ஒரு உண்மையைக் காரண காரிய தோரணையாக வெடுத்துரைக்குங்கால் ஒருதலைச்சார்பாயிருந்துரைத்தல் அவர்களுக்கு அழகன்றாம். இங்கே "லக்ஷியம்" என்பதென்ன வென்று சற்று விசாரிக்கத் தக்கது.

லக்ஷியமென்பது லக்ஷணங்களுக் கெல்லா மிருப்பிடமானது. லக்ஷணங்களெல்லாம் பொருந்தப் பெற்றதொன்று எதுவோ அதுவே திரிபுர சுந்தரியாய் திரிலோகத்திலும் அழகு நிறைந்து அழகுருவேயாகி நிற்பது. இப்படியுள்ள லக்ஷணங்களெல்லாம் பொருந்தி யமைந்ததான உத்தமலக்ஷியம் (Supreme Ideal) மூவுலகுக்கும் ஒன்றேயாம். அந்த ஒன்றே யுண்மையாயுள்ள அழகு. அந்த அழகே "உண்மை"—"சத்தியம்:" அச்சத்தியமே "அழகு" இப்படியாக அழகும் சத்தியமும் அபேதமானது.

"Truth is Beauty": Beauty is Truth. That is all
You know on earth and all ye need to know."
—*Keats.*

சத்தியமே அழகு: அழகே சத்தியம்: "த்ரிஜகத்" ரூபமான உலகில் அறியத்தக்க தெல்லாமும், அறியவேண்டிய தெல்லாமும் அவ்வளவில் அடங்கும். அந்த அளவு ஒன்றுதானும் அளவுகடந்தது. அப்படியென்றால் (தற்போத) அறிவினாலறிந்து அளவிடப்பட முடியாதது.

* அரிச்சந்திரன்: ச. பவானந்தம் பிள்ளை அவர்கள் இயற்றியதோர் நவீன நாடகம்.

அதற்குப்பேர் "ப்ரஜ்ஞாபாரமிதா" என்றும் "ஆரியப்ரஜ்ஞாபாரமிதா" என்றும்சொல்லுவர் மேலோர். அவள் புத்தபகவானுக்குத் தாயும் தாரமுமாவள். அப்படியென்றால் ஸர்வஜ்ஞத்துவம் தானும் அவளிலே பிறந்து அவளையே ஆச்ரயித்து வளர்ந்து, அளவிறந்த ப்ரஜ்ஞான கன்ரூபிணியான அவளில் தானே யொடுங்கும் என்பது மேலோர்தம் ஸ்வானுபவமாம்.

"ஓங்காரி யென்பாளவளொரு பெண்பிள்ளை
நீங்காதபச்சைநிறத்தையுடையவள்
ஆங்காரியாகியேஐவரைப்பெற்றிட்டு
றீங்காரத்துள்ளேயினிதிருந்தாளே"

யென்பது திருமந்திரோபதேசம். ஜகத்காரணியும் ஜகத்ரக்ஷணியுமான (தாயும் தாரமுமான) அவளே ஜகத்பூரணியுமாம்—ஜகமெங்கும் பூரணமாய் நிறைந்திருப்பவள்: அதாவது, ஜகத்தைத் தன்னுள் அடக்கிக் கொள்பவள். இந்த ஜகமெல்லாம் ஈசுவரசங்கல்ப மாத்திரத்தினாலே யுண்டானதாகையால், நாமரூபப்பிரபஞ்சமான உலகை "சங்கல்பமாத்ரமான"தென்றும் அந்த சங்கல்பம் பிரஹ்மகல்பம் வரையிலிருந்தாலும் கடைசியில் நிலைபற்றதாகையால், அதுகொண்டு "ஜகம்போய்" என்றும் சொல்லுவர் மேலோர். அவர்கள் காலாதீதத்திற் "போய்" என்று சொல்வதை உண்மை விவேக மில்லாதார் கால பரிச்சேதத்திலும் பொய்யென்று தப்பர்த்தம் செய்துகொண்டு அநர்த்தம் விளைத்து ஆர்ப்பாட்டம் செய்வதுண்டு. இது "நிலையில்லாக்காரியத்தை நிலை நிறுத்த வேண்டாம்" என்னும் பெரியோர் மூதுரைக்கு விருத்தமா யிருப்பதால், விவேகிகள் இவர்கள் செய்யும் கண்டதுண்ட வாதத்துக்குச் சரியாக எதிர்வாதுரையாது வாளாவிருப்பர். இதனால், பூர்வகாலத்து லக்ஷியங்கள் உயர்ந்தனவாயினும் லக்ஷணக் குறைவுள்ளனவென்று நவீனநாகரிகர் நயந்துரை கூறுவர். இது நயவஞ்சகமேயன்றி உண்மையுரையாகமாட்டாது. ஏனெனில் லக்ஷணக் குறைவுண்டானால் லக்ஷியம் மூளியாய்ப் பூரணங் குறைந்துபோம். பூரணமில்லாத காரணம் ஒருக்காலும் "லக்ஷியம்" ஆகமாட்டாது.

ஆகையால் அரிச்சந்திரபுராணத்துக்கு லக்ஷியார்த்தமான சிறப்புண்டென்று ஒப்புக்கொண்டால், பிறகு வாச்சியார்த்தங்களில் குற்றங்கூறி பேதபாடம் செய்வது ஒவ்வாததாகும். அரிச்சந்திர புராணத்தை ஆதாரமாகக் கொண்டு அதன் விஷயங்களை மாற்றி நவீன நாடகமியற்றலாகாதென்பது நம் கருத்தல்ல! இதை நன்குக உணர்ந்து உட்கொண்டு உறுதி பாராட்டல் வேண்டும்.

அரிச்சந்திர புராணம் லக்ஷியார்த்தம் பொருந்திய புராதன சரிதைகளில் ஒன்று என்று ஒப்புக் கொண்டால், மனதில் கல்மஷம் (குற்றம்) ஏற்பட இடங்கொடாமல் அஃதையுள்ளபடியாராய்ந்து பார்க்கவேண்டியது விவேகிகளின் கடமையாம். லக்ஷியார்த்தத்துக்குப் பொருத்தமான வாச்சியார்த்தமும், வாச்சியார்த்தத்துக்குப் பொருத்தமான பதார்த்தமும் ஆக இப்படி வாக்குப் பொருத்தம் பூரணமாயமைந்திராவிட்டால், அப்பொழுது அதைக் குறை தீர்த்துக் குற்றங்கடிந்து நிறைபொருள் பொருந்த நிர்ணய விதிப்படி பாடபேதம் கற்பித்துத் திருத்த வேண்டிய தவசியமேயாம்.

"மறைபொருளா லோதியதூர் மந்திரத்தை வெளியிடாதே!
நிறைபொருளா லர்ச்சித்தோர்க்கு நியமவிதியினேரேகூறு!
குறைபொருளாற் குண்மையோதிற் குற்றம்வரும் கற்றம் போமா
விறைமேலாணை புலம்பாதே யென்றியம்பினு ளென்னம் பாள் வர்லே."

என்பது வாக்குவரி ஆஜ்ஞையாக விருக்கிறபடியாலே பெரியோர்கள் புராண மெழுதுவதில் பூரணத்தைக் காரணத்தில் ஒளித்துக் காரணத்தைக் காரியத்தி லொடுங்கச்செய்து காரண காரிய தோரணை(தொடர்ச்சி)யாக உண்மையை யோதிக்கொண்டு போயிருக்கிறார்கள். புராணத்தின் நோக்கமெல்லாம் காரணமான பூர

ணத்தைக் காரியமான சீரணத்திற் பொருந்தப் பொருத்திக் காட்டுவதேயாம். இது வெள்ளிடை மலைபோல் சிறுபாலாரும் அறியச்செப்பியிருக்கிறார் மேலோர். கல்விகற்று வல்லுனரான வித்வத் சிரேஷ்டர்கள் நாம் பழம்பாட்டி கதையை யெடுத்துக் காரணம் காட்டுகிறோமென்று நம்மை எள்ளாது, உள்ளத்தை யுணர்வான் சற்று மனதை நிறுத்திப் பார்ப்பாராக! கதையின் நோக்கமெல்லாம் என்னவெனில்:—

"கதை கதையாம் காரணமாம்
காரணத்தில் ஒருழக்காம்
ஒருழக்கில் புல்முளைத்தது!
புல்லைக்கொண்டு பசுவுக்குப்போட்டேன்
பசுமாடு பால்தந்தது
பாலைக்கொண்டு பாட்டியிடம் கொடுத்தேன்
பாட்டி அப்பம் தந்தாள்!
அப்பத்தைக்கொண்டு காக்காய்க்குப்போட்டேன்
காக்காய் கரிதந்தது!
கரியைக்கொண்டு கருமானிடம் கொடுத்தேன்
கருமான்வந்து செம்புதந்தான்
செம்பைக்கொண்டு பூச்செடிக்கு ஜலம்வார்த்தேன்
பூச்செடி புஷ்பம் தந்தது!
புஷ்பத்தைக்கொண்டு பிள்ளையாருக்கு அர்ச்சித்தே[ன்]
பிள்ளையார் எல்லாம் தந்தார்."

கதை கதையாகச் சொல்வதெல்லாம் காரண மாமந்தப் பூரணத்தைக் காட்டவே யாதலால் "கதை கதையாம் காரணமாம்" என்றார். அனந்தமாய் அளவற்றதாயுள்ள காரண பூரணத்தின் ஒரு "கலை"—"ஒருழக்காம்" அந்தக் கலாரூப மாத்திரையில் நீங்காத (பிரணவ ஸ்வரூப) பச்சையாம் "புல்" முளைத்தது. அந்தப் பிரணவ காரணத்தின் காரியமான "புல்லை"ப் பாசபந்தப் பசுவாம் ஆங்கார ஸ்வரூப ஜீவனுக்குப்போட்டேன். அந்தப் பசு பிரணவப்புல்லை யுட்கொண்டு தற்போத மென்னும் "நாதப்பால்" தந்தது. அந்தத் தற்போதம் தானும் அவித்தையாம் "பாட்டி"யிடம் சேர, பாட்டி "புரியஷ்டக" ரூப "அப்பம்" தந்தாள். "புரியஷ்டக" ரூப அப்பத்தைக் காமசங்கல்ப ரூப அசுத்தமனமாம் "காக்கை" கொள்ள, அது தாமஸரூப "கரி" தந்தது. தாமஸரூப "கரி" யானது கர்த்துருத்துவ ரூப "கருமா"னிடம் சேரவும் அதில் ராஜஸகுணம் சேர்ந்து கடரூப செம்பாயிற்று. கடரூப "உடலை"க்கொண்டு பூச்செடிக்கு ஜலம் விடுவதாம் சுபவாசனையை வளர்க்க அது "தஹராகாச"ரூபப் "பூ"த்தந்தது. தஹராகாச மலரைக்கொண்டு பிள்ளையாரைப் பூஜைசெய்ய அவர் ஸர்வ சித்தியையும் ("எல்லாம்") கொடுத்தார். அதைக்கொண்டு ஜீவன் கிரமமுத்திமார்க்கத்தில் ஸர்வஜ்ஞனாகிக் கிருதகிருத்தியனுனன் என்பது கருத்து.

இப்படியாக எல்லாக்கதைகளும் உண்மையுணர்த்தல் ஒன்றையே நோக்கமாகக் கொண்டிருக்க அது பூர்வீகமானதுபற்றி இக்காலத்துக்குப் பொருந்தா துள்ளனவற்றைவிலக்கி நவீன நடைக்கேற்றதைச் சேர்த்துத் திருத்தியிருக்கிறேனென்கிறார். அரிச்சந்திரன் என்னும் நவீன நாடகமியற்றிய நண்பர் நவீனமான திருத்தங்கள் செய்ததைப்பற்றி நாமொன்றும் குறை கூறவில்லை. புராதனமான கதை இக்காலத்துக்குப் பொருந்ாதென்று அதற்கோர் இழுக்குரைத்தது பூர்வ கிரந்தத்துக்குப் பொருந்தா தொன்றையே யெடுத்துக்காட்டத் துணிந்தோம். ஏனெனில் இவர் இக்காலத்துக் கேலாதனவென் றுரைப்பதற்கான காரணமெல்லாம் இக்காலத்தாரது அறியாமையைக் காட்டுவதன்றி பூர்வ கிரந்தத்திலுள்ள குறையைக் காட்டுவதாகவில்லை. இவர் "இயற்கை யமைப்புக்கேற்ப" வென்று கொண்டனவெல்லாம் பிராகிருத தர்மத்துக்கு விரோதமென்று தத்துவ தரிசின வகையானே எளிதிற்காட்டலாம். "ஐம்பொறி புலன்களும் கண்டதே காட்சி" யென்பது இக்காலத்தின் "இயற்கை யமைப்புக்கேற்ப" தென்று கொள்வரேல், அப்பொழுதும் (Hypnotism) முதலான வசிகர வித்தைகள் மலிந்து கிடக்கும் இக்காலத்தில் "விசுவாமித்

திர சிருஷ்டி” மட்டும் ஏலாதென்று சாதிப்ப தெப்படி?

இவர் தைத்திரேயோபநிஷத் வாக்கியமொன்றை யெடுத்தாண்டிருப்பதோடு அதன் கருத்தையே உட்கொண்டு பின்வருகிறபடி அவையடக்கத்துக்குப்பின் “கட்டுரை” கூறியிருக்கிறார்:—

“சத்திய மதற்கு மேலாந் தருக்கமு மில்லை நீங்காச்
சத்திய மதற்கு மேலாஞ் சாத்திரங் கணித மில்லை
சத்திய மதற்கு மேலாஞ் சமயமு மில்லை யொன்றாஞ்
சத்திய மொன்றே வீடு தந்திடு தகைமைத் தாமால்.”

சத்தியமொன்றே சித்திகளெல்லாமளிக்குமென்பதையிவர் இக்காலத்தார் நம்பமாட்டாரென்றெண்ணினர் போலும். “ஜோதிரங் தர்க்கதம்மனஃ” என்று கூறிய ஜோதிர்மனஸானது “த்ரிஜகத் சிருஷ்டிஸ்திதிவ்யஸந கர்மகிருது” என்ற சுருதி வாக்கியப்படி “திக்ஜகத்” ரூபமான எல்லாவற்றையும் படைத்துக் காத்து அழிக்கும், சக்தி வாய்ந்த தென்பதை யிவர் அறியார்போலும். “கலி, கலி” யென்று கலிகாலத்தின் மேல் பழியைப்போட்டு, இக்காலத்தார் தம் அறியாமையை யெல்லாம் காலபலனாகப் பாவித்துக் காலசக்ரத்தில் அகப்பட்டுழன்று கதியிழந்து விதிவழி பற்றிச் செல்கிறார்கள். விதி விதி யென்றால் என்ன? தன்னுடைய பூர்வ சங்கல்பபலனை யன்றி வேறு தனக்கு அந்யமான விதியொன்றுமில்லை. நன்மை விதைத்தால் நன்மை விளையும்; தீமை விதைத்தால் தீமை விளையும்; மனிதன் நைஷ்கர்ம சித்தி பெற்றக்கால் விதியை வென்று மதியுடன் கூடலாம்.

“தான்முன்னஞ் செய்த விதிவழி தானல்லால்
வான்முன்னஞ் செய்தங்குவைத்ததோர் மாட்டில்லை
கோன்முன்னஞ் சென்னி குறிவழியே சென்று
நான்முன்னஞ் செய்ததே நன்னில மானதே.”

என்பது திருமந்திரோபதேசம்.

அரிச்சந்திர புராணப் பூர்வ கிரந்த வரலாறுள்ளனத்துக்கிடமானதாயிருக்கிற தென்பது நம் நவீன நூலாசிரியர் துணிபு. இப்படி நினைப்போர் இவர் ஒருவரேயன்றி இன்னும் அநேகர் இருக்கிறார்களென்பது நாமறிந்ததே. ஒருக் காலத்தில் நாமும் அப்படியே நினைத்ததுண்டென்று ஒப்புக்கொள்வோம். “நானறியாப் பருவத்தே” நினைத்ததெல்லாம் “என்னை யானறியப் பொய்யாப் போனதை யிங்கே மறைக்கவேண்டிய நிமித்தமொன்று மில்லாமையால் நாம் நினைத்ததுங் கூடத் தவறே யென்று எல்லாம் வல்ல தெய்வத்தின் முன்பாகக் கன்னத்தில் போட்டுக்கொள்ள சித்தமா யிருக்கிறோம். ஆனால் மற்றோரெல்லாரும் நம்மைப் போல்தானே தப்பெடுத்துக் காட்டவும் தவடையில் போட்டுக் கொள்வார்களென்று நாம் எண்ணவில்லை. அவரவர்க்கும் அனுபவம் முதிருங்கால் உண்மை தானே வெளிப்படும்.

“என்னை யறிய விசைவித்த வென்னந்தி
யென்னை யறிந் தறியாத விடத்துய்த்துப்
பின்னை யொளியிற் சொருகிப் புறப்பட்டுத்
தன்னை யளித்தான் றற்பர மாகவே.”—திருமந்திரம்.

“பெற்றிருந் தாரையும் பேணார் கயவர்க
ளுற்றிருந் தாரை யுலைவன சொல்லுவர்
கற்றிருந் தார்வழி யுற்றிருந் தாரவர்
பெற்றிருந் தாரன்றியார் பெரும் பேறே.”

—திருமந்திரம்.

வைரத்தை வைரத்தாலறுக்க வேண்டுமேயன்றி வேறொன்றால் அறுக்க முடியாது. அதே மாதிரி குணத்தைக் குணத்தால் வெல்லலாமேயன்றி வேறொன்றால் வெல்ல லாகாது. அரிச்சந்திரனைப் பொய்சொல்லத் தூண்டுவான் சபதங் கூறி முன்வந்த விசுவாமித்ரர், அவனைப் பொய் யொன்று சொல் என்று பன்முறையுந் தூண்டினது பதடித்தன மென்கிறார் நம் நவீன கிரந்தகர்த்தா.

“விசுவாமித்திர சிருஷ்டி”யை நவீன நாகரிகக் கொள்கைக் கொவ்வாதென்று தள்ளினவர் “விச்வாமித்ர சூழ்ச்சியையும் பதடித்தனத்தோடு சேர்ந்ததாகக் கூறுகிறார்.

சீத்தலைச் சாத்தனார் "மணிமேகலையில்"

"தெய்வந்தொழாஅள் கொழுநற்றொழு தெழுவாள்
பெய்யெனப் பெய்யும் பெருமழை என்ற
பொய்யிலாப் புலவன் பொருளுரை தேறாய்."

என்று சொல்லியதோர் மந்திரோபதேசத்தை விசுவாமித்திரர் சூழ்ச்சிக்குப் பொருந்த மாற்றி மந்திரமா யுபதேசிக்க மனமுற்றும்,—

"குறைபொருளார்க் குண்மையோதிற் குற்றம் வரும் நற்றம் போமல், இறை மேலாணை புலம்பாதே யென்றி யம்பினுளென்னம்பாள்" சொற்கேட்டு சொல்லாமற் சுட்டிக்காட்டி விடுவதே யுத்தமமென்று உள்ளெழுந்தவாரியாய்க் கூறி விட்டோம்.

"விசுவாமித்ர சிருஷ்டியின்" உண்மையுணர்ந்தால் "விசுவாமித்ர சூழ்ச்சியின்" சூக்ஷ்மம் விளங்கும். விசுவாமித்ர சூழ்ச்சியில் மூடத்துவமுமில்லை: அரிச்சந்திரன் நடத்தையில் அசட்டுப் பிடிவாதமுமில்லை.

சத்தியவிரதம் பூண்டார் ஒழுக்கத்தைப் பரிசோதிக்கப் புகுந்தான் விசுவாமித்திரன். தான் படாத பாடும் பட்டுத் தபஸியற்றித் தடுமாறித் தேறினவராதலால், ஸத்தியவிரதம் பூண்டொழுகுவார் உலகிலில்லை யென்பது அவருடைய மதம். இம்மதத்தைக் குலைப்பான் வசிஷ்டர் "உண்டென்று" சாதித்து விசுவாமித்ரரிடமுள்ள ரஜோகுண வாஸனையை வெளியிடுமாறு பந்தயம் போட்டுக் கொண்டார். தேவ சபையில் இந்திரன் முன்பாக இவ்விரு ரிஷிகளும் சபதம் கூறிக் கொண்டதை யேற்றுக்கொண்ட நம் கிரந்தகர்த்தாவுக்கு "விசுவாமித்ர சிருஷ்டி"யை யேற்றுக்கொள்வதும் "விசுவாமித்ர சூழ்ச்சி"யின் சூக்ஷ்மத்தை யுணர்வதும் "இக்கால வமைப்புக்கேற்ப" வில்லை யென்று தள்ளும்படி நேரிட்டது. "மலையை விழுங்கிய மஹாதேவருக்கு உலக்கை தொண்டையிற் சிக்கிக் கொண்ட கதை" யாகத் தானிருக்கிறது. „Ideal" என்று சொல்வது குப்பை கூளம் சேர்ந்த குவியல் இல்லை. இலக்ஷணங்களெல்லாம் நன்கமையப் பெற்ற இலக்ஷியமாமது; அதில் ஒரு பாகத்தைத் தள்ளவும் கொள்ளவும் இடமில்லை! எல்லாம் அழகு பொருந்த அமைந்திருக்க அதை மாற்றினல் அதன் அழகு குலையாதா? "யாரே அழகுக் கழகு செய்வார்?" அப்படியே அழகுசெய்தாலும், "அழகுக்கழகு செய்தாலது பொருந்துமா?" பொருந்தாதென்பதே பெரியோர் அனுபவமும் நமது சித்தாந்தமுமாம். "என்னிஷ்டம்! அதற்குயார் இரண்டு சொல்வது?" என்று கேட்டால், அதற்கு பதில் சொல்ல நமக்கு வாயில்லை. "வாயில்லா நாயனுரே" பதில் சொல்லவேண்டும்.

"கொட்டுக் குந்தாலியிரண்டே யிரண்டிற்குங்
கொட்டுக் குந்தாலிக்கும் பாரை வலிதென்பர்
கொட்டுக் குந்தாலிக்கும் பாரைக்கு மூன்றுக்கு
மிஷ்டம் வலிதென்பரீச னருளே!"

என்பது திருமந்திரோபதேச மென்று மட்டும் எடுத்துரைக்க வல்லேம்.

நான்முகத்தே பூர்வகிரந்தத்தின் கதையைத் திருத்துவது அவசிய மாயிற்றென்று சொல்லும் அவருடைய ஆக்ஷேப சமாதானங்களுக்கெல்லாம் ஒரே திருமந்திரத்தில் பதிலுரை காணலாம்;—

"தத்துவ மெங்குண்டு தத்துவனங் குண்டு
தத்துவ மெங்கில்லை தத்துவனங் கில்லை
தத்துவ ஞானத்தின் தன்மையை யறிந்தபின்
தத்துவ னங்கே தலைப்படுந் தானே.",

பொய்யைச் சொன்னுலும் பொருந்தச் சொல்ல வேண்டும். மெய்யைச் சொன்னுலும் மருளின்றிச் சொல்லவேண்டும். "அருளிலார்க்கில்லை யவ்வுலகம்: பொருளிலார்க்கில்லை யிவ்வுலகம்" என்பது பழமொழி. அருளிலார்க்கு அத்தனுலகு (Kingdom of God) இல்லைபோல், "பொருளிலார்க்கு"—லக்ஷியநாட்ட மில்லாதவர்களுக்கு இவ்வுலக ஞானம், அதாவது 'தத்துவஞானம்' இல்லையாகும்.

ஓம் தத்ஸத்.

## Easy, Lessons for the Young.

*(Copyright.)*

### 1. How to Control the Uncontrolable Mind.

## சிறுவர்க்கான ஹிதோபதேசங்கள்.

### 1. அடங்காப்பிடாரியை அடக்கும்விதம்.



ள்ளதெல்லாம் ஒன்றே.'' அப்படி யென்றால் என்ன? மிட்டாய்க்கடையில் விதம்விதமாய் செய்து வைத்திருக்கும் நாமரூப பேபதங்களான மிட்டாய்களெல்லாம் கடையிலிருக்குமட்டும், காசுகொடுத்து வாங்கும் வரையில், பல வேறு தினிசுகளாகவிருந்தாலும், வாங்கி வாயில் போட்டுக்கொண்டு பார்த்தால் எல்லாம் ஒன்றே—ஒரே தித்திப்பாய்த்தானிருக்கிறது நிஜம். இது எல்லாக்குழந்தைகளுடைய அநுபவத்துக்கும் ஒத்திருப்பதால், இதற்கு பிரத்தியக்ஷப் பிரமாணம் என்று பேர். (மிட்டாய்க்கடையில்) ''உள்ளதெல்லாம் ஒன்றே'' யென்னும் அறிவு ''அனுபவஞானம்' என்று சொல்லப்படும். அஃதேபோல, இந்த பூலோகமுதல் சந்திர சூரியாதி கிரகங்கள் சேர்ந்த இந்த சூரியமண்டலமும், அதற்கப்பாலுள்ள நக்ஷத்திர மண்டலங்களும் நாமரூபத்தால் பேதப்பட்டாலும், அவைகளைத்தின்னுபார்க்கும் குழந்தைகளான அனுபவஞானிகளுக்கு அவையெல்லாம் ஒன்றேயாக விருக்கிறது நிஜம். அந்த ஒன்றும் என்னமா யிருக்கிறதென்றால், சர்க்கரையின் தித்திப்புப்போல் அனுபவிக்க மதுரமாயிருக்கிறது. இதற்கு ''மதுரபாவம்'' என்றுபேர். சிறு குழந்தை கடையிலுள்ள மிட்டாய்களை யெல்லாம் பார்த்து 'இதுவேணும், அதுவேணும்' என்று அழுது பல மிட்டாய்களைத்தின்னு ருசியறிந்து கடைசியில் எல்லாம் ஒரே தித்திப்பு என்று தெரிந்தபின் எப்படி அதன்ஆசையடங்கிவிடுகிறதோ அப்படிப்போல, அபயவரதஹஸ்தங்களோடு கிளிமொழிபேசிக் கனிமொழிகாட்டும் தடஸ்தாகாரமான தேவியின் உட்டியாணபீடமான சிற்றிடைமருங்கில் விளங்கும் சிற்றம்பல வீதியிலே உட்டியமசக்தியினாலே எடுத்துக்கொண்டு போகப்பட்ட அருட்குழவிகள் சூரிய சந்திராதி நக்ஷத்திர மண்டலங்களையெல்லாம், 'இதுவேணும், அதுவேணும்' என்று அருட்தாயிடம் அழுதுகேட்டு வரப்பிரஸாதமாய்ப்பெற்றதோர் உலகப்பேறுகளையெல்லாம் உண்டு ருசிபார்த்தபின் இவையெல்லாம் திருவருள் தானேயென்று உணரும் உணர்ச்சி யொன்றுண்டு. அதற்கு உள்ளுணர்வு என்றுபேர் இந்த உள்ளுணர்வில், கள்ளம் கபடு இல்லை. மாசுமறு இல்லை. சுத்தஸ்படிகம்போல் அது ஒன்றிலும் ஒட்டாது எல்லாவற்றின் பிரதிபிம்பத்திற்கும் இடங்கொடுத்துக் கொண்டு எதனாலும் கல்மஷப்பட்டதாகாமல் எதையும் கல்மஷப்படுத்தாமல் ஜோதியையுண்டு ஜோதிர்மயமதாய் ஜ்வலித்துக் கொண்டிருக்கும். இந்த உள்ளுணர்வுடையாருக்கு ''எல்லாம் ஒன்றே'' என்கிற ஞானம், மிட்டாய்களை விதம் விதமாய் வாங்கித் தின்னலுத்த குழந்தைக்கு ''மிட்டாயெல்லாம் ஒன்றே'' என்கிற அனுபவஞானமுதயமாகிறாற் போல, தானே உதயமாகும். அந்த ஸ்வயஞ்ஞானோதயம் ஆகும்பொழுது, அவர்களுக்கு எல்லாம் அவர்கள் உள்ளத்திற் பிரகாசிக்கும் திருவருட்பிரகாச மயமாய் விளங்கும். அந்த திருவருட்பிரகாசமே திரிபுரதஹநமஹாஸம்ஹாரகாலத்திலும் மஹாப்பிரளயகாலத்திலும் ஆனந்தத் தாண்டவம் செய்யும் அம்பிகாபதியின் திருமேனியில் விளங்கும் ''திருநீறு'' என்று சொல்லும் விபூதி மஹாத்மயமாய் விளங்கும்.

மஹாப்பிரளயத்திற்குப் பின் உண்டாகும் மஹாசிருஷ்டி காலத்தில் அந்தத் ''திருநீறு'' தானே ''திருவருட்சக்தி'' யாகத்தோன்றி ஜீவ

ன்களின் எஞ்சின கர்மங்கள் அனுபவித்துத் தொலையும் பொருட்டு தனுகரண புவன போகாதி நாமரூபப் பிரபஞ்சங்களை யெல்லாம் சிருஷ்டிக்கும். ஒரு மஹாகல்பமளவும் உயிர்கள் உய்யும் வகை புணர்ந்துய்யுமாறு லீலைகளியற்றிப் பஞ்சகிருத்திய பரயோக நிஷ்டைகூடிய பின், பகவான் தன்கலைகளை உள்ளே யிழுத்துக் கொள்ள, மஹாப்பிரளய முண்டாகி எல்லாம் திருநீறு மயமாய் மாறி பகவான் திருமேனியில் உத்தூளனமாகத் தரிக்கப் பெற்றதாகும். இது தான் பகவான் அசைவற்று நின்றுடும் ஆதியந்த மில்லாத ஆனந்த நிருத்தம். இந்த நிருத்தத்தை (தாண்டவத்தைத்) தரிசித்தவர் "எல்லாம் வல்லசித்த ராவர்."

இந்த "எல்லாம் வல்ல சித்தர்" எப்படிப்பட்டவர்? என்று ஒரு கேள்வி பிறக்கலாம் அவர்கள் மஹிமையை அளவிட்டு முடியாது; "சித்தன் போக்கு சிவன் போக்கு" என்று தான் சொல்லலாம். சிவனுலாகத்தக்க தெல்லாம் சிவனை யன்றி வேறொன்றுமில்லை யென்றுள்ளுணர்வா லுணர்ந்தமர்ந்து விசாரந் தீர்ந்த சித்தனல் ஆகும். ஸத்யம் அது தானே வாக்கு ரூபமாகி, அந்த ஸத்ய வாக்கே அரிச்சந்திரனுகி, தர்ம மதுதானே உருவெடுத் தமைந்து சந்திரமதியவளாய் அவன் பக்கலில் நிற்க, இருவரும் உளம் கலந்து உயிர்கலந்து உணர்வு கலந்து உடலுங் கலந்து பெற்றதோர் பாக்கியமாய் நின்ற "அகண்ட லக்ஷியமே" உருவாயமைந்ததொக்கும் 'லோகிதாக்ஷன்' காலில் முள் தைத்ததை யெடுக்கும் வியாஜம் மேற்கொண்டு, காலைக் குளறி விஷத்தை யூட்டிமோர் பாவியொருக்காலும் "எல்லாம் வல்ல சித்தன்" ஆகமாட்டான். அவன் அம்ர்னுவிகச் சேற்றிற் பிறந்து வளர்ந்ததோர் மானிடப்பதராம். மானிடப்பதரும் மணி நெல்லோடு கலந்து விளைந்தாலும், பனியில் நனைந்து வெயிலில் உலர்ந்து, உரலில் மசிந்து, உலையில் வெந்து தேவர்களுந் தேடும் ஹவிஸுக்குதவும் அமுதாமோ அப்பதர்? ஆகாததுபோலும், காற்றில் தூற்றவே கடிதில் பிரியும் பதரே போலும் வஞ்சக நெஞ்சுடை மானிடப் பதர்கள் தாம் எத்தகைப் பெருமை யெய்தின ராயினும் "எல்லாம் வல்ல சித்தர் தம்" பாததூசி பெறுந்திறன் பொருந்தார். ஆதலால் சிற்றறிவுடைய சிறுபெரும் மனிதர் தப்பளைபோற்றம் ஊனுணர்வதனை யூதி யூதியே உப்பிடச்செயினும், தேவாதிதேவனும் விரும்பிய உருவாம் புருஷ காம்பீரம் நிறைந்ததோர் விருஷப மெய்திட நினைப்பது வீணே! ஈஸப் கதையில் தப்பளையின் விதி தானே லபிக்கும், சாதன சாத்திய முணர்ந் துண்மையிற் பழகார் தமக்கு. ஊனுணர் வற்றதோர் உண்மையை புணரத் தானுணர்வாகி யூனுணர் வொழிக்கவே வேண்டும். ஊனுணர் வொழிந்த உத்தமர்க்கன்றி மற்றவர் தம்மை "மாயாஜால மனமெனும் பெண்மயில்" "வாயால் வல்லவள்" ஆகவே தோன்றி, அடங்காப் பிடாரியைப் பெண்டு கொண்டே பின்னர் பேயாட்டந் தானுடும் பின்புத்திப் "பொய்க்கால் நடைமயிலப் போலியர்" உயர்வை மையல் என்னுமோர் தையலாம் பிணையிட்டுக் கால்கட்டு கட்டிக் கடைவீழச்செய்யுமே!

எல்லாம் வல்லதோர் சித்தரைக்கண்டு நான், உண்மையில் அடங்காப் பிடாரியாம் பெண்மயில்,—மாயாஜால மனமெனும் தூர்த்தையை, வாயால் வல்ல அவள் வுன்மையை வென்று, நாய்போல் நயந்து நடக்கவேசெய்யும் உபாயம் ஏதென் றுண்மையாய்க்கேட்டேன்: கேட்டவன் குறிப்பைக் குணம்பெறக் கிரஹித்ததோர் எல்லாம்வல்ல சித்தர் தாமும், நயம்பெற நாட்டார் நகைமிகை நாடேல்: உண்மை யெதுவுண்டோ, அதை யுண்மையிற் பற்றுக: அன்பினுலாவது அரற்றினாலாகுமோ! வாயை மூடித் தாயைத் தொழுது, துஷ்டரை வெல்லும் துர்க்கையைச் சரண்புகுந் துத்தம பக்தியால் உளங்குளிரப் பூசித்து, பஞ்ச பூதங்களை யமிர்தமாய்ச் சமைத்து, பரித்தியாக சித்தத்தை வெண்சாமர

மாக்கி, உள்ளத்திலுண்மையை யுள்ளபடி நாடி கள்ளத்தை விட்டுக் கபடத்தை யறுத்து "என்னென்று சொல்லுமுன் எண்மினையாய் விடுமோர்" பரிபக்குவ மறிந்து பதிவிரதத் தானெடுத்தால் சதிபதி தர்ம்ம உணர்ச்சியின் உண்மையால் கதிபெற வாழலாம், கண்ணியமும் தான் பெறலாம்,—என்றுமே செப்பி யென்றுடை தேஹத்தை வெள்ளாடை புரித்து வினைகெடத் தான் பார்த்து, சிற்றுடை கட்டிச் சிறுபெண் தானுக்கி பதிவிரதா தர்மத்தைப் பாரில் நீ காக்க வென்றார். "பதிவிரத மென்பதின் பான்மைபுணராச் சிறியேன் தனக்குச் செய்யுபதேசமென்?" என்றுமே யானவரைப் பணிந்துமிகக் கேட்கத், துணிந்து நின்றேற்குப் பக்குவ சோதனை பண்ணுவானவரும் "தோப்புக்காணம் போடவே" யென்று தொந்திசரிய வினைவாட்டி, ஸம்ஹார சக்கர நடுவில் வைத்து சாக்ஷியாத் தேவியைத் தான் குறித்து துர்க்கையை அதிஷ்டானமாக வைத்து துன்பொழி மந்திரம் தான் ஜபித்தார். அன்பேயுருவாய் நின்ற அவர் அதட்டின சப்தமும் குளிர்ந்ததாச்சு: இன்பயுருவாய் நின்ற அவர் இதோபதேசமும் இது வாச்சு:—

ஓம் ஸ்ரீ துர்க்கமாயை நமஃ

I

"அண்டை அயல்கேட்க அலறாதே!
சண்டை போட்டெதிர் பேசாதே!
உண்டதற் கிரண்டகம் நினைக்காதே!
கொண்டவனைக் குடி கெடுக்காதே!
சண்டித்தன மினிச செய்யாதே!

II

ஊமைக் கோபம் கொள்ளாதே!
தூய்மைத் துரோகம் செய்யாதே!
வாய்மை வஞ்சகம் செய்யாதே!
நேர்மை கடந்து நடவாதே!
சீர்மை தான்கெடச் சினக்காதே!

III

நெஞ்சில் வஞ்சகம் நினையாதே!
பஞ்சில் தீப்பொறி வையாதே!
குஞ்சு குழந்தையைக் கெடுக்காதே!
வஞ்சக நெஞ்சரைச் சேராதே!
பஞ்ச பூதப்பழி போடாதே!

"மூவைந்து மானதோர் ஐந்தைக்கொண்டு நீ உள்ளொழும் ஐயங்களெல்லாம் தொலைப்பாய் தொலைத்தபின் உன் மனத்தெளிவில் வந்து தோகையே பின்னுமுபதேசஞ் செய்வேன்!" என்றவர் இனியமொழிகேட்டு அவர் பாதபத்மங்களில் தான் விழுந்தேன். விழுந்தெழுந் தாஹரவெனத் தொழுதேன். வெட்டவெளியன்றி வேறுகாணேன்.

[இதற்குப் பதார்த்தமும் வாச்சியார்த்தமும் தானே விளங்குவதா யிருப்பதால் நாம் இங்கெடுத்தோதத் தேவையில்லை. தத்துவார்த்த பரார்த்தங்களும் லக்ஷியார்த்த முணர்ந்தோதியவருக்கே விளங்கும். மனத்தெளிவடைந்த யாராயினும் இதற்கு லக்ஷியார்த்த முரைத்தால் அவருக்கு விவேகசிந்தாமணியின் 18-வது வால்யம் முழுவதும் அனுப்பும்படி ஆக்ஞையானபடியால், அதற்கிசைந்து அவருடைய ஆக்ஞையை வெளியிட்டோம். பதில் அனுப்புகிறவர் நவம்பர் 15உக்குள் பத்திராசிரியர் கையில் வந்து சேரும்படி தீர்க்கமாயெழுதி யனுப்பவேண்டும். அங்கீகரிக்கப் படாதவை பிரசுரிக்கவும் திரும்பவும் படமாட்டா. வி. சி. ப-ர்.]

# TEN YEARS' WAR OF THE FLESH AND THE SPIRIT 1901-1910.

## "OVERCOMING THE WORLD."

### Or, The Great Vow of Renunciation.

*"Like the hart panteth after the water in the brook, so panteth my heart after Thee, O Lord!"*

"From a number of useful articles written to "The *Hindu Organ*," Jaffna, I am of opinion you have a sound knowledge of our *Yôga Sastras* and you have some *Siddis* also. Therefore I approach you in the attitude of a disciple to a Guru and entreat you to show me the Way to the Light of God......Oh my Guru! Will you pity this humble servant and show him "What *Daharâkasâ* is! What *Kanakasabhai* of *Chit-ambaram* is! What the seat of Brahman within me is! The thousand-petalled lotus! The seat of வாலைசக்தி! Her three letters! etc. How am I to see the Dances of Natarajah within myself......Oh Guru! Have mercy on me and show me the Way clearly to see my Self, to see the Dances of Natarajah, to see my Eternal Mother! I am determined to go to India and see you personally......"—*A Thirsty soul from over the seas.*

திருமூலதேவர் திருமந்திரோபதேசம்.

"காணுறுகோடிகடிகமழ்சந்தனம்
வானுறமாமலரிட்டுவணங்கினும்
ஊனினைநீக்கி யுணர்பவர்க்கல்லது
தேனமர்பூங்கழல்சேரவொண்ணாதே."

"அரித்தவுடலையைம்பூதத்தில்வைத்து
பொருத்தவைம்பூதஞ்சித்தாதியிற்போந்து
தெரித்தமனாதிசத்தாதியிற்செல்லத்
தரித்ததுதாரணைதற்பரத்தோடே."

"ஆவிக்கமலத்தினப்புறத்தின்புற
மேவித்திரியும்விரிசடைநந்தியை
கூவிக்கருதிக் கொடுபோய்சிவத்திடை
தாபிக்குமந்திரந்தாமறியாரே."

## I—* வயிறொடுகிளத்தல்—1901.

### உலகைவிட்டொழித்தல் அல்லது மஹாபிநிஷ்க்ரமணம்.

I.

Man the Microcosm—Analysis of His Physical Body.

மண்ணிற்பிறந்து மண்ணாகு மிவ்வுடலம்
மாயைவலைப்பட்டு மாக்ஷிபெற்ற தென்னேடி !
எண்சாணுடலுக்கும் ஒருசாண் வயிறேகாண் :
சாண்வயிற்றுக்குள்ளே சமைந்தது நீள் குடலம்மா !
ஆகாரப்பையொன்று அதன்மேலே வீற்றிருக்கும் !
பைக்குள்ளே செல்லும்வாய் தானாக அசையுமடி ;
அசையும்வாய் கொண்டதெல்லாம் அரைத்துள்ளே செல்லவிடும் ;
உட்செல்வதாகாரம் அது உடன்படுதல் சீரணமாம் ;
சீரணமாம் சக்தியினால் சித்திப்ப தென்னேடி ?

* A talk with the Belly as representing the 'World' within. Extracted from "the Gospel of the Holy Mother" published on *Vijayadasami* day 1903. Price Rupee one. V. P. P. Extra. Apply to the D. K. Agency Mylapore.

What external Nature is one the Cosmic World, so is the Belly in the Microcosm of Man.

## II.

His Subtle Bodies or Discrimination of The Natural from Real Man *i. e.* Jiva and **Atman.**

சித்திப்ப தன்னமய மதுவேதா னுடலங்காண் !
அன்னமயத்துள்ளே அமைந்துளது பிராணமயம் :
பார்த்தாலதுவாயு : பிராணனென்றால் வேறல்ல ;
பிராணமயம்போக மூன்றாமயம் மேலுண்டு :
மனோமயமதுகாண் "நான்" "என" தென்றாடிவரும்.
விஞ்ஞான மயமென்பார் கூர்புத்தி யதுவேகாண் ;
ஆனந்த மயமதுவோ சுத்தமனச் சாக்ஷியம்மா ;
இத்தனைக்கு மேலுள்ளான் **பரமனவனொருவன்**
**அவனே நானன்றி** அயல்வேறு அல்லன்காண் !

## III.

The Pratyagatman or Adam before the Fall.

பசிதாக மெனக்கில்லை பாந்தவியந் தானில்லை !
சுகதுக்க மெனக்கில்லை சுற்றமுமே தானில்லை !
எங்கும் நிறைந்திருந்தும் ஏகாங்கியாயிருப்பேன் :
எனக் கங்கமில்லை பங்கமில்லை இங்கிதசங் கேதமில்லை :
மானமில்லை ஈனமில்லை மாயை மயக்கமில்லை :
ஊணுறக்கந்தானில்லை ஊனமொன்று மெனக்கில்லை :
மனைவிமக்க ளெனக்கில்லை மாநிலத்தார் யாருமில்லை.
இப்படியிருக்கு ‡ மெனக்கோர் குறைசொல்லி
1 மாயக்காரியவள் † மதனியிடம் முறையிட்டாள்.

## IV.

The Evolution of Natural Man or creation of EVE and MAN's fall

முறையிட்ட சப்தமது முயழுங்கியதே யம்பரத்தில் §
அம்பரத்தாடு மழகனது கண்டுகொண்டே
† ஆடாடென் றாடினன் ஆட்டிவிட்ட பம்பரம்போல்
2 தேவியவளொருத்தி தேவடியாள்போற் குதித்தாள்.
ஆட்டமுங்குதிப்பு மதிசயமா யிருக்குதென்று
ஆனந்த மயங்கடந்து அகண்டவெளியாயிருந்த
3 ஆதியவள் ஞானியின்றாள் அவசரமா யோடிவந்தாள் :
4 மாயப்புலைச்சியவள் மகிழ்ந்துசில வார்த்தைசொல்ல
5 மாயவுருவானேனான் மனமறுகப் பேசலுற்றேன்.

---

1. Maya or Avidya symbolised by the Serpent in the Bible.
‡ Perfect Man or Adam before his Fall.
† Vidya or true knowledge - EVE before the fall :—Perfect Womanhood—the Crowning Glory of God's creation.
§ The Voice reached the Throne of God *i.e.* The Self-luminous plane or The highest plane transcending, though where the *light* of all lights shineth in Glory.
† Set the Great Law of Evolution to work.
2 The Divine Energy called the World or the Holy Ghost—The whole line means : The Law of Evolution began to work with the utmost speed.
3 Suddhamaya *at one* with God, variously called Parasakti, Ambika and other names all cannoting the same state of consciousness known as the Turya state or Paramahamsa—pure Satva.
4 Asuddhamaya *i.e.* impure or tainted by a slight admixture or Rajas and Tamas or suoject to Gunas *i.e.* to passion and ignorance *i.e.* Nature in the Eve that yielded to Temptation.
5 Denotes the fall of Man from his perfect State : Describes Jivotpatthi, or birth of Natural Man.

## V.

Natural Man and His bitter Experience of the World *i. e.* After 'Paradise Lost.'

பேசினபேச் சென்ன வாதிட்ட வார்த்தையென்ன
6 மாயைவந்து ஜாலம்செய்ய மல்லுக்குநான் நின்றதென்ன
சொல்லச்சொல்ல வளருமம்மா சூதுவாது தொடருமம்மா.
சுருக்கச்சொல்லி விளங்கவைப்பேன் சின்மயமே சாக்ஷிநிற்பாய்.
7 மாயையவள் கையாலே மதனன் பட்ட அவஸ்தையெல்லாம்
சொல்லத்தான் ஏறுது சொல்வன்மை போதாது :
8 வயிற்றையவன் நொந்துகொண்டான் வாயால்மிகப் பிதற்றலுற்றான் ;
எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணிமிக நொந்துபோனான்.
பாழ்வயிறே பழங்கிணறே பழிபாவ முனக்கில்லையே !

## VI.

His disgust of the world and turning away from its vanities.

"இதா ஹிதம்பாராயே 'இடும்பை கூர் என்வயிறே !'
உன்னைத் தூர்த்தாலும் தூர்வதில்லை தூரெடுத்தாலும் தெளிவதில்லை
துறந்தாலும் விடுவதில்லை துதித்தாலுங் கேட்பதில்லை
உறைத்தால் உபாதிகொள்வாய் புளிப்பானால் போகா தென்பாய்
மிகுந்து போட்டால் வருந்திடுவாய் குறைந்து போட்டால் எரிந்திடுவாய்
மட்டுமிதம் தப்பாமல் மணிசிறிதும் பிசகாமல்
சுசிருசியோ டுன்றனக்கு சமைத்துச் சுடப்படைக்கவேண்டும்.
வேண்டியதை வேண்டியபடி வேணமட்டும் படைத்தேனே !
படைத்ததற்குப் பயனென்சொல் பாழ்வயிறே பெருச்சாளியே."[9]

## VII.

His thirsting to attain his former state of Bliss or endeavour to regain Paradise-

"உண்டுடுத் துறங்கியுனக் குழைத்ததெல்லாம் போதுமென்றே
ஓய்ந்தொழிந் தட்கார வுன்னினே னுள்ளத்தே.
நீ ஆட்டிவைத்தபடியெல்லாம் ஆடினேன் வெகுகாலம்
ஆடிபலுத்ததன்றி ஆனதொன்று கண்டதில்லை.
பண்டைபோ லுன்றனுக்குப் படைக்க இப்போ ஆளில்லை !
ஆளில்லா வேளையிலே நீ யடுத்தல்லோ பிழைக்கவேண்டும் !
சுசியென்ன உருசியென்ன சொகுசு தானுனக்கென்ன !
அடைகாய் கனிகிழங்கு அகப்பட்டதைப் புசிக்கும்—
பெரியதொரு வீடுதனில் பெருமை யுனக்குண்டோ சொல்லாய் !"

6 The Differentiating Spirit called the World or Worldly Spirit.
7 The real man *i.e.* the Soul of man or Atman that knows and wills.
8 Belly the Symbolical representation of the Cosmic World or external Nature in the Microcosm of Man.
9 The fabled Vehicle of Ganesa or Vigneswara, the Lord of Nature and Natural or Psychic Powers which are the greatest obstacles to realisation by man of his own true Self.

## VIII.

Rising of the Christ in Man : Takes the Great Vow of Renunciation and thus "Overcomes the World." 10

“உன்னோடு வாழ்தலரி” துணர்ந்தே யுனையொழித்தார் பெரியோர்கள் ;
உனையொழிக்காக் காரணத்தா லுழலுகிறேன் மிகநொந்து ;
உன்னோடு ஒத்துவாழ உபாயமொன்று சொல்லுவன்கேள்,
என்சொற்படியே நீ நடந்தால் எக்காலும் சுகித்திடலாம் :
“கண்டது கிடைத்ததுவைக் கனிவுடனே பரிந்தளிப்பேன் ;
அளித்ததைப் புசித்து நீ யடங்கியே யிருந்தையானால்,
அகிலமுழு தனதாகு மதிலேதும் சங்கையில்லை ;
சற்றேனு மேறுமாறாக விருந்தாயே யாமாகில்,
கூறுமலுனை யொழித்துக் குந்திடுவேன் சும்மாகாண்.”

ஓம் தத்ஸத். —ஆனந்தத்தாய் மொழி,

---

# II.—NAVARATRI—1910.

## "Hunger and Thirst" Conquered.

# நவராத்திரி பூஜை—1910.

## II.—வயிற்றை விட்டொழித்தல்—1910.

### வைராக்கிய சித்தன்வேசடை நீக்கம்.

ப்ரஹ்மவித்வரன் ப்ரேமாநந்தகீதம்.

---

“க்ஷுத்பிபாஸாமலாம் ஜ்யேஷ்டாம் அலக்ஷ்மீம் நாசயாமியஹம் !
அபூதிம் அசம்ருத்திம்ச் ஸர்வாம் நிர்ணுதமே க்ருஹாத்.”—ஸ்ரீஸூக்தம்.

[பசிதாகமாகிற மாலின்யத்தை யுண்டுபண்ணுகிற பெரியவளாகிய அலக்ஷ்மியை நான் (உம்முடைய அநுக்ரஹத்தால்) போக்கடிக்கிறேன்: தாரித்திரியத்தையும் ஸகலமான விருத்தி யில்லாமையையும் என்னுடைய க்ருஹத்தினின்றும் போக்கடியும்—என்பது பதப்பொருள். இதன்மேல் வித்யாரண்யர் வியாக்கியானம் இது:—“பசிதாஹம் முதலிய் அசுத்தத்தை யுண்டாக்குகிறவளும் ஸ்ரீமஹாலக்ஷ்மியான உமக்கு முன்னே பிறந்தவளுமான அலக்ஷ்மியை நான் நாசம்செய்து விடுகிறேன். ஸ்ரீமஹாலக்ஷ்மியே! ஏழைமையையும் குறைவையு மென்வீட்டில் நின்றும் வெளியே துரத்தும்.”]

மூலத்துதித்தெழுந்த முக்கோணச்சக்கரத்துள்
வாலைதனைப் போற்றி வயிறிழந்தேன்பூரணமே.

“புல்லரிடத்திற்குப்போய் பொருள்தனக்கு கையேந்தி
பல்லை மிகக்காட்டிப் பறக்கவிழிக்கிறேன்டி !
பல்லைமிகக் காட்டாமல் பறக்க விழிக்காமல்
புல்லரிடம் போகாமல் என் கண்ணம்மா !
பொருளெனக்குத் தாராயோ”!—சித்தர் விண்ணப்பம்.

---

10 Aiming to lead the original Blissful Life of undifferentiating knowledge which is Life Eternal.

"என்னென்ன செய்கினு நீ ஏதேதியற்றிடினும்
உன்பிள்ளை யுன்னடிமை யுனக்கேநா னர்ப்பணம்காண்!
"என்பிள்ளை யென்பொருளென் றெதிர்த்துவரு மமகாரத்தை
உன்பிள்ளை யுன்பொருளென் றுன்பாதத் திடைபணித்தேன்."

ப்ரஹ்மவித்வரன் ப்ரேமானந்த கீதம்.

1. ஸ்வார்ப்பண பிந்துதர்ப்பணயஜ்ஞம்.

(1) அர்ப்பணம் உனக்கென்றே யென்தனைக் கொடுத்தேன்
தர்ப்பணம் பிந்துவால் † பின்னுநான் செய்தேன்
அர்ப்பணஞ் செய்துபின் தர்ப்பணஞ் செய்தவென்
அர்ப்பணதர்ப்பண யாகத்தின் மகிமையை யென்னசொல்வேன்!

2. யாகாக்நியின் சிறப்புரைத்தல்.

(2) முப்புரத்தில் முன்னையிட்ட தீயதுவே 'வாம'மதாய்
இப்புரத்தில் என்னஹத்தே மூலத்தீ தானுகி
எப்புரத்தி லுள்ளமலம் எத்தனைதா னுனுலும்
அப்புரத்தை பத்தோடு மெரித்திடுதீ யானதுவே!

3. "க்ஷுத்பிபாஸாமலாம் ஜ்யேஷ்டாம் அலக்ஷ்மீம் நாசயாமியஹம்."

(3) மும்மலத்தை யெரித்திடுதீ மூலத்தீ யதுவொன்றே
எம்மலத்தை யானுலும் எரித்திடுதீ யாகுமம்மா!
எம்மலத்தை யெரித்திடுதீ யென்பசிதாஹப் புன்மலத்தை
நின்மலமா யெரித்ததுவும் நிர்விகற்பத் தாலன்றோ!

4. நிர்விகற்பசித்தி யுரைத்தல்.

(4) நிர்விகற்பத் தாலன்றி நீளுலகில் வெற்றியில்லை
நிர்விகற்பந் தானதுவே நினைவொன்று மில்லாமனம்
நிர்விகற்ப மனமதுவே நிறைசூன்யம் என்றுரைப்பர்
நிர்விகற்ப மாமனதை நிஷ்டையிலே கண்டுணர்வாய்!

5. "ஒழிவிலொடுங்கி 'ஓம்'என் றுற்றுப்பார்!"

(5) நிஷ்டையிலே கண்டுணர்ந்த நிர்விகற்ப மனந்தானும்
நிஷ்டையிலே நீயொடுங்க நிறைசூன்யம் தானுகும்;
நிஷ்டையிலே நிறைசூன்யம் தானுன நீயுமப்போ
நிஷ்டையிலே நிறைசூன்யத் துள்விளங்கும் சோதியைப்பார்!

† ("பிந்து என்ருல் என்ன?" வென்பதை விவேகசிந்தாமணியின் சென்ற எப்ரல்-மே-மாசத்து சஞ்சிகையின் 14 வது பக்கத்தில் பார்க்க.

6. சிற்றம்பல தரிசனம்.

(6) சோதியைப்பார் சூல்கொண்ட மேகம்போல் சூனியத்தில்,
ஆதியைப்பார் அம்பலத்தில் ஆடுமவன் கூத்தைப்பார்!
ஆதியைப்பார் பாதியைப்பார்! ஆதிபாதியின் சோபனம்பார்!
ஆதிபாதியின் இடையிருக்கும் சிற்றம்பல வீதியைப்பார்!

7. சிற்சபாநாதன் சயனம்.

(7) சிற்றம்பல வீதியைப்பார்! சின்மயானந்த சோதியைப்பார்!
சிற்றம்பல நாடியைப்பார்! சின்மயசக்தியின் கூத்தைப்பார்!
சிற்றம்பல மாடியைப்பார்! சின்மயசுக நித்ரையைப்பார்!
சிற்றம்பலத் தாடியலுத்த சிற்சபாநாதன் சயனம்பார்!

8. சிற்சபாநாதன் அறிதுயில் அதிர்சயம்.

(8) சித்சபாநாதன் சயனம்பார்! திருவரங்க க்ஷேத்திரம்பார்!
சிற்சபாநாதன் கோயிலைச்சுற்றிய திருமதில்கள் ஏழும்பார்!
சிற்சபாநாதன் சயநக்ரஹத்தைச் சுற்றிலுமுள்ள சோதியைப்பார்!
சிற்சபாநாதன் அறிதுயில்கொள்ளும் அதிர்சயத்தையு முற்றுப்பார்!

9. "ஏகைவசக்தி பரமேசுவரஸ்ய."

(9) மூலத்துதித்த வாலையுமங்கே விருத்தையாகி யிருப்பதைப்பார்!
காலத்துதித்த பைரவரங்கே பரஞ்சோதியாகி ப்ரகாசிக்கப்பார்!
† சீலத்துதித்த சேஷநாதமும் அரவணையாக அமர்ந்ததுபார்!
நீலத்துதித்த நின்மலாதேவியின் கோலாஹலத்தையுங் ‡ கூர்ந்துபார்.

10. "அரங்கத் தாடியலுத்தவன் நித்ரை."

(10) கூர்ந்துபாரதோ நீளாதேவி குதூஹலநித்ரா சுகமளிக்க
கூர்ந்துபாரதோ ஸ்ரீதேவிதானும் ஆடியலுத்த கால்பிடிக்கக்
கூர்ந்துபாரதோ பூதேவியின்னும் பாதம்வருடிப் பரிமளம் வீசு'றுள்;
கூர்ந்துபாரதோ அரங்கத்தாடி யலுத்தவன்நித்ரை செய்கோலத்தை!

11. அறிதுயில்கொள்ளும் அரங்கநாதர் ஸந்நிதான மஹிமை.

(11) அரங்கத்தாடி யலுத்தவனித்ரை செய்குவதைநீ கண்டுவிட்டாய்
அரங்கத்தாடி யலுத்தவன்போல் ஆவதுமல்லதும் விட்டுவிட்டாய்!
அரங்கத்தாடி யலுத்தவன்கால்போல் 'விகற்பநிவிகற்பமும் ஓய்ந்ததப்பா!
அரங்கத்தாடி யலுத்தவன் நித்ரைமுன் பசிதாஹங்களும் பறந்ததப்பா!

‡ ஸம்ஹாரசக்தி அகண்டாலந்தலக்ஷ்மியாய் ஐக்யபோகம் அளித்ததையும் என்றபடி.
† உன்மனி ஆதிசேஷமாய்' நின்றத்தத் துவாதீதமான நாதம்.

12. பசிதாகவேசடை நீக்கம்.

(12) பசிதாஹங்களும் பறந்ததப்பா பார்முதற்பூதங்க ளொழிந்ததப்பா!
பசிதாஹங்களும் இறந்ததப்பா பார்முதற்பூதங்கள் தாமொடுக்க;
பசிதாஹங்களுக் குற்பத்திலயம் பார்முதற்பூதங்கள் என்றுணரப்பா!
பசிதாஹங்களுக் காஸ்பதமாமந்த மூத்தாளுமுன்னைவிட் டோடிப்போனாள்!

13. ப்ரஹ்மவித்வரன் சாக்ஷாத்கார தரிசனம்.

(13) பாத்தை மறைத்ததோர் பார்முதற் பூதங்கள்
பாத்தில் மறைந்ததோர் புதுமை போல்
† 'வரனை மறைத்ததோர் விஜ்ஞான விருத்திகள்
† 'வரனில் மறைந்ததோர் புதுமை காண்!

14. ப்ரஹமவித்-வரன்,-வாரியன்,-வரிஷ்டன்.

(14) ப்ரஹ்மவித் தாமவன் ப்ரஹ்மத்தை யறிந்தவன்
ப்ரஹ்மவித் வரனவன் ஸ்ரீவித்யை வரித்தவன்
ப்ரஹ்மவித் வாரியன் ஸ்ரீவித்யை தரித்தவன்
ப்ரஹ்மவித் வரிஷ்டன் சிவசக்தியைக்கிய ஸ்வரூபாரூபனே!

ஓம்தத்ஸத்.

## விஜய தசமி.

தசமியிலே சாகரத்துக் கப்பாலேறிச் சிலம்பொலியுமுனதுடைய இருக்காலுண்டு
நிசமாகஸ்தூல சூக்ஷமத்தில்தோன்றி நிஷ்களத்தில் நீயுநானுமொன்றேயாகி,
யறிவில்லா ஆனந்த மயமேயாகி, யருள்வெளியாய் வரமருள்வாய் அகண்டரூபி,
சுசிவழியாய் சுசிமுகமாய்ப் பிள்ளைமுகம் பார்த்தாள்வாய், சோதியே மனோன்மணியே
[கதினவாழ்வே

ஓம் ஸ்ரீ:

# The Vision of the Merging of the Unifying Spirit in Unity Eternal.

## "குருலிங்க சங்கம தரிசனம்."

"ஸ்ரீகுரு: ஸர்வகாரண பூதாசக்தி:"—பாவனோபநிஷத்."

"திருவருட்பால்தான் சுரக்கதேவி சுந்தரேசுவரரைக்
கூடிக்கலந்து குதூஹலந்தானிறைய
உண்டேனேயுண்டேனே யவளுண் ணமுலையொழுகும்
மீனாக்ஷிசுந்தரேசர் மெய்யமுதப்பாலம்மே."

---

The Day of Cleansing of the Spirit (1st July 1900.)

ஆனித்திருமஞ்சனம் அல்லது அருட்குழவி யுற்பவம்.

"இழுக்கென்றிருந்தேனீ சன்றன்கோயிலேதமிலேன்
கழுக்குன்றிலேவந்தேவியழைத்தென் குறையோரா
திழுக்காவென்றனையிழுத்தேகித்திருக்குடந்தையிலே
அழுக்காறழிதிருமஞ்சநீராடிப்பழுக்கவைத்தவன்வெருட்டினனே."

—ஆனந்தத்தாய்மொழி.

† 'ப்ரஹ்மவித்வரன்' என்றுகொள்க.

The Day of Merging of the Spirit. (16-10-1910.)

"குருலிங்க சங்கமம்"

குருபரனருளால் நோக்கத்
திரிபுரமெரித்தாள் குறுநகையாலே
எரிபுரமாமென் சிந்தையுட்கூடித்
திரிமலந்தீர்த்த குடந்தைக்கோனே!
அரிஅயன்காணு அடிமுடிகாட்டி
நரிபரியாக்கிய நலமுங்காட்டிப்
பரிகரியாகிப் பாரினிலோடாக்
கிரிபுரமாமுன் சிவபுரங்காட்டிப்
பிரிவிலாப்பிரிவால் பற்றெலாந்தீர்த்துத்
திரிமலதஹனந் தசவருடத்திற் செய்தாய் போற்றி!

---

# Correcting the False Notion of Body.

## (By St. Thayumanavar)

## உடல்பொய்யுறவுணர்த்தல்.

("பசிதாஹமற்றுப் பாழ்வயிற்றைத் துறந்திருக்கலாகுமா?"
என்னும் கேள்விக்குத் தாயுமானவர் பதில்.)

"உடல்பொய் யுறவாமி னுண்மையுறவாகக்
கடவரார்? தண்ணருளே கண்டாய்--திடமுடனே
உற்றுப்பார்! மோன ஞெருசோல்லே யுண்மைநன்றுப்
பற்றிப்பார்! மற்ற வேல்லாம்பாழ்."

1. "ஆசையறுமின் ஆசையறுமின்!"

"மெய்யான தன்மை விளங்கினால் யார்க்கேனும்
பொய்யான தன்மை பொருந்துமோ—ஐயாவே!
மன்னு நிராசை யின்னம் வந்ததல்ல வுன்னடிமை
யென்னுநிலை யெய்துமா றென்!"

2. அறிவான் தன்மனத்தொடு நினைத்தல்.

"எதுக்குச்சும்மா விருமனமே யென்றுனக்குப் [க்கு
போதித்த வுண்மையெங்கே போகவிட்டாய்—வாது
வந்தெதிர்த்த மல்லரைப்போல் வாதாடி னையேயுன்
புந்தியென்ன போதமென்ன போ!"

3. பரிபக்குவனன்றி அபக்குவனுக்கு 'குருலிங்கசங்கம' தரிசனம் கிடைத்தலரிதுணர்த்தல்.

"குருலிங்க சங்கமமாக்' கொண்ட திருமேனி
கருவொன்றும் மேனிநம்பாற் காட்டாத்-அருளென்று
கண்டவர்க்கே யானந்தங் கண்டுகொள லாம்,அலது
கொண்டவர்க்கிங் கென்ன கிடைக்கும்!"

4. 'ஒழிவிலொடுக்க' முணர்த்தல்.

அல்லும் பகலும்பே ரன்புடனே தானிருந்தாற்
கல்லு முருகாதோ கன்னெஞ்சே—பொல்லாத
தப்புவழி யேனினைந்தாய் சந்ததமு நீயிறந்த
†வெய்ப்பிலே யானந்தமே.

† எய்ப்பு—ஒடுக்கம்.

5. பரங்கருணை வள்ளலாமிறைவன் துணையுணர்த்தல்.

இனிய கருணைமுகி லெம்பிரான் முக்கட்
கனியமிர்த வாரியின்பக் கட்டி—தனிமுதல்வன்
நித்தன் பரமன் நிமலனிறை வாய்நிறைந்த
சுத்தனமக் கென்றுந் துணை.

6. மௌனோபதேசமே யுபதேசமென்பதுணர்த்தல்.

நீதியாய்க் கல்லாலி னீழலின்கீ ழேயிருந்து
போதியா வுண்மையெலாம் போதித்தான்—ஏதில்
சனகாதி யாய தவத்தோர்க்கு ஞான
தினகரனு மௌன சிவன்.

7. தேகமனோ சேஷ்டைகளொழிந்த ஞானிகளுக்கு யோகநிலையும் மோகநிலையாமென்பதுணர்த்தல்.

தேகச்செயல்தானுஞ் சிந்தையுட னேகுழையில்
யோகநிலை ஞானிகளுக் கொப்புவதோ—மோகநிலை
யல்லலிலே வாழ்வாரோ † அப்பனே நீயற்ற
வெல்லையிலே சும்மா விரு.

8. யோகத்திற்றேர்ந்த மனமும் சும்மாவிருக்கச் சுகோதயமா மென்பதுணர்த்தல்.

சும்மா விருக்கச் சுகமுதய மாகுமே
இம்மாயா யோகமினி யேனடா—தம்மறிவின்
சுட்டாலே யாகுமோ சொல்லவேண் டாங்கன்ம
நிஷ்டா சிறுபிள்ளாய் நீ.

9. மனமிறக்க (கழுத்தையறுக்க) மாயை நீங்குமன்றி தத்பதலக்ஷியத்தோடைக்கியமான துவம்பதத்துக்கு என்றும் அழிவில்லை.

நீயற்ற வந்நிலையே நிஷ்டையதில் நீயிலையோ ?
வாயற் றவனே மயங்காதே !—போயற்
றிருந்தாலு நீபோகாய் என்றுமுள்ளாய் சும்மா
வருந்தாதே யின்பமுண்டு வா.

10. குருபரன் யோகதற்பரனான சீஷனுக்கு ‡ "ஏதுமறநில்" லென்றுணர்த்தல்.

வாவாவென் றின்பம் வரவழைக்குங் கண்ணீரோட்
ஆ! ஆ! வென்றேயழுத வப்பனே—நீவாடா!
எல்லா நமக்கெனவே யீந்தனையே யீந்தபடி
நில்லாய் அதுவே நிலை.

† அப்பனே—விவேகமனதைச் சுட்டிச்சொல்லியது.

‡ Compare. "பூதமுதலாகவே நாதபரியந்தமும் பொய்யென்றனைக்காட்டி யென் போதத்துள் நடுவாக அடியீறுமில்லத போதபூரணவெளிக்குள் ஏதுமறநில்லென் றுபாயமாய் வைத்து."

11. குருலிங்க சங்கம தரிசனத்தால், கிடைக்கும் அகண்டலக்ஷியமே சிரேஷ்டமான வழி யென்றுணர்த்தல்.

நில்லாப் பொருளை நினையாதே நின்னையுள்ளோர்!
சொல்லாப் பொருட்டிரளைச் சொல்லாதே-கல்லாதே
சிந்தை குழைந்துசுகஞ் சேரக் குருவருளால்
வந்தவழி நல்ல வழி.

12. ஓர்மொழி யுபதேச மஹிமையும் அதன் சித்தியுமுணர்த்தல்.

வழியிதென்று மல்லா வழியிதென்றுஞ் சொல்லிற்
பழிபழியாம் நல்லருளாற் பார்த்தோர்-மொழியுனக்கே
யேற்றிருக்கச் சொன்னவன்றே யெங்கும் பெருவெ
பார்த்தவிட மெல்லாம்நீ யார். [ளியாம்

13. அகத்துறவு புறத்துறவுண்மை யுணர்த்தல்.

பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்
ளாருந் துறக்கை யரிதரிது—நேரே [ளையைப்போ
மனத்துறவு மப்படியே மாணு விலற்றி
† லுனக்கிசைந்த வாறென்றே யோர்.

14. விசாரம் தீர்ந்து பாராமற்பார்க்கும் பரமநிஷ்டையும் அதன் சித்தியுமுணர்த்தல்.

ஓராம லேயொருகா லுன்னு மருள்வெளியைப்
பாராம லுள்ளபடி பார்த்திருந்தால்—வாராதோ
பத்துத் திசையும் பரந்தெழுந்தா னந்தவெள்ளந்
தத்திக் கரைபுரண்டு தான்.

15. அஹங்காரந்தோன்ற விடங்கொடாமல் அகத்திலே யந்தர்யாமியாயுள்ளதுபோல் புறத்திலும் ஸர்வவியாபியாயிரு வென்றுணர்த்தல்.

தானென தன்மைவந்து தாக்கினு லவ்விடத்தே
வானதி மாயை வழங்காவோ—ஞானகேள்
உன்னுள்ளே தோன்று வுறவாகி நின்றதென
வென்னுள்ளே யென்று மிரு.

16. குருலிங்கசங்கம தரிசனங் கண்ட பரிபக்குவனுக்கு குருசிஷ்ய அபேதசித்தியே அகண்டானந்த மளிக்குமென்பதுணர்த்தல்.

என்னையுன்னை யின்னதிது வென்னும னிற்குநிலை
தன்னையரு ளென்ற தருணத்தி—லன்னைபெற்ற
† பிள்ளைக்குஞ்சொல்லாத பெற்றிகண்டா லையனே
யுள்ளத்தி னுள்ளே யுணர்.

† ஒன்றுகைகூடின் மற்றொன்றும் கைகூடு மென்றபடி.

16 ‡ Compare திருமந்திரோபதேசம்:
"முகத்திற் கண்கொண்டு பார்க்கின்ற மூடர்காள்
அகத்திற் கண்கொண்டு பார்ப்பதே யானந்தம்
மகட்குத்தாய் தன் மணாளனோடாடிய
சுகத்தைச் சொல்லென்றால் சொல்லுமாறெங்ஙனே."

17. "கண்டவர் விண்டிலர் விண்டவர் கண்டிலர்" என்றதி னுண்மை யுணர்த்தல்.

[யிலே
சொன்னவர்தாம் நிஷ்டை தொகுத்திரார் நிஷ்டை
மன்னினவர் போதியார் மாமௌனன்—தன்னுள்
விருப்பாகக் கைகாட்டி மிக்க வடகீழ
லிருப்பான் நிருவிகற்பத் தே.‡

18. ஒப்பற்ற கரபாத்திர தீக்ஷையும் காரிய காரண தோரணை யறிந்து 'காரிய காரண வாசனைப் பற்றற' வன்றி வேறென்றுக்குமில்லை யென் றுணர்த்தல்.

இந்த நிருவிகற்பத் தெந்நை யிருக்கநிட்டை
சிக்கைதீ நேருய் செகமனைத்தும்—வந்ததொடர்ப்
பாடுகெட வன்றேவோர் † பாத்திரத்துக் காடலல்
லாலாடுவதே ஞட்டு மவன்.

19. 'குருலிங்க சங்கம' விசேஷத்தால் அவனே தாமான ஸஹஜநிஷ்டரே பரமகுருவா மென் றுணர்த்தல்

அவனே பரமு மவனே குருவும்
அவனே யகில மனைத்தும—அவனே தாம்
ஆனவரே சொன்ன லவரே குருவெனக்கு
கானவருய் நிற்பதெந்த நாள்!

20. குருவடி சரண்புகுந்த மனம் திருவடி விட்டக லாதிருந்தால் அஹங்கார புருஷனும் அதற்கு ஆளாமென்ப துணர்த்தல்.

நாளவங்கள் போகாமல் நாடோறு நந்தமையே
யாளவந்தார் தாளின்கீ ழாட்புகுந்தாய்—மீளவுன்னைக்
காட்டாம னிற்குங் கருத்தறிந்தால் நெஞ்சேயுன்
ஆள்தான்நா னையமில்லை காண்.

21. நிஷ்டை நிலையிற் பழமை நினைந்திரங்குதலுண ர்த்தல்.

யான்தா னெனலறலே யின்பநிஷ்டையென் றருணைக்
† கோன்தா னுரைத்தமொழி கொள்ளாயோ—தோ
யிழுக்கடித்தாய் நெஞ்சேநீ யென்கலைகள் சோர [ன்றி
அழுக்கடிக்கும் வண்ணார் போலாம்.

---

‡ Compare.

"கைம்மாறு தானில்லையென்றே கைப்பொருளெல்லா முனதெனக் கொண்டாய், கைம்மாறு தானில்லை யென்றே கைப்பொருள் மெய்ப்பொருள் காண்டுகொள் என்ருய், கைம்மாறு தானிலாவொன்றைக் கனவுநிலைவழிக் தருள் நிறைந்தழி கண்டேன்."

†. ஓர்பாத்திரத்துக்காடல்=ஒப்பற்ற கரபாத்திர தீக்ஷை வகித்து அந்தக் கரபாத்திர பிக்ஷைதானு மேற் கமனம் ஆடல்.

21 †. அருணைக்கோன்=அருணகிரிநாதர். தோன்றி யிழுக்கடித்தாய்=சவிகற்ப நிஷ்டையிலிருந்தக்காலெல்லாம் இடை இடையே தோன்றி இழிக்கடித்தாய்; ஏனெனில் 'உள்மலம் ஒழிய' வென்றுணர்த்துவான் "அழுக்கடிக்கு வண்ணார் போலாய்" என்றார். நிருவிகற்பத்தில் ஒடுங்கின மனம் மாயை நீக்கத்தால் பின்னர்தோன்றி யிழுக்கடிப்பதில்லையால் பழமை நினைந்திரங்குத தென்றேற்பதாயிற்று.

---

(The following favourite Song of Sri Lokanayaki Ammal (Mrs. C. V. S.) is taken from the *Viveka Chintamani* for May 1901.)

## "எப்படி யிருந்தாலென்."

இராகம் - கல்யாணி.

பல்லவி.

எப்படி யிருந்தாலென்—எனக்கினி
எப்படியிருந்தாலென்

அநுபல்லவி.

அப்படி யிப்படி ஆனந்தப்படி
சொப்பிர காசமான சுகமகமானபின் (எப்படி)

சரணங்கள்.

1. நாடியே துதித்தாலும் அனைவரும் நாப்பியே பழித்தாலும்
தேடிய பொருள்தன்னில் நாடியே மனமுறைத்
தாடிய கூத்தமர்ந்த் அசங்கோஹ மானபின் (எப்படி)

2. ஆறுவிகாரமற்றேன் அறிவென்னும் சொருபமொத்தனுபவித்தேன்,
சீறியே அகம்புத்தி சிதளமானபின்
சோதிர் மயமான சுகமக மானபின் (எப்படி)

3. தன்னிலே யடக்கமென்றே தடஸ்தமாய் தன்மயமாகிநின்றேன்
பொன்னுக்குள் பணியது பிரிந்தாற் போலவே
சின்மயமாயெங்கும் சேஷித்து நின்றபின் (எப்படி)

—ஆவுடையாரம்மாள்.

"தானான தன்மயமே யல்லாலொன்றைத் தலையெடுக்கவொட்டாது தலைப்பட்டாங்கே
போனாலும் கற்பூரதீபம்போலப் போயொளிப்பதல்லாது புலம்வேறின்றாம்
‡ ஞானகாரத்தினொடு ஞேயமற்ற ஞாதுருவுநழுவாம நழுவிநிற்கும்
ஆனாலுமிதன்பெருமை யெவர்க்கார்சொல்வார் அதுவானலதுவாவ ரதுவேசொல்லும்."

அதுவென்று லெதுவெனவொன் றடுக்குஞ்சங்கை யாதலினாலதுவெனவு மறவேவிட்டு
மதுவுண்டவண்டெனவுஞ் சநகனாதிமன்னவர்கள் சுகர்முதலோர் வாழ்ந்தாரென்றும்
பதிபிந்தநிலையெனவு மென்னையாண்டபடிக்கு நிருவிகற்பத்தாற் பரமானந்தக்
கதிகண்டுகொள்ளளவு நின்னருள்கூர் இந்தக்கதியின்றி யுறங்கேன்மேற் கருமம்பாரேன்.

———:-:———

—தாயுமானவர்.

ஓம் ஸ்ரீ சாவித்திரியைநம:

# உபநிஷதர்த்த தீபிகை.

## 7. சுகரஹஸ்யோபநிஷத்.

சஹநாவவது இதிசாந்தி:

———



இப்பொழுது ரஹஸ்ய உபநிஷத்தை வியாக்கியானம் செய்கின்றோம்:—தேவரிஷிகள் பிரஹ்மாவைப் பூஜித்து நமஸ்காரம் செய்து "ஓ பகவானே, எங்களுக்கு ரஹஸ்யோபநிஷத்தைச் சொல்லவேண்டும்" என்று கேட்டார்கள். அவர் சொன்னதாவது:—

1. "முன்காலத்தில் மகா தேஜஸ்வியானவரும் சகல வேதங்களுக்கும் தபசுகளுக்கும் ஓர் நிதி (பொக்கிஷம்) போன்றவருமான வியாசர் அம்பிகையுடன்கூடிய சிவத்தை நமஸ்கரித்து அஞ்சலி ஹஸ்தராய் சொன்னார்."

2-3. ஸ்ரீ வேதவியாசர் வாக்கியம்: "தேவர்களுக்கெல்லாம் தேவனானவரே, மகாஞானியே, பாசங்களைப் போக்குவதையே நிச்சயமான விரதமாக வுடையவரே, என்னுடைய புத்திரனாகிய சுகருக்கு வேத சம்ஸ்கார கர்மத்தில் (உபநயனத்தில்) பிரஹ்மோபதேசம் செய்யவேண்டிய காலம் இப்பொழுது சமீபித்துவிட்டது. ஓ ஜகத்குருவே அப்பிரஹ்மோபதேசம் தங்களால் செய்யப்படவேண்டும்" என்றார்.

‡ ஞானம் ஞேயம் ஞாதுரு என்பவற்றைத் 'திரிபுடி' என்பார்கள். இது, அறிவு, அறியப்படும் பொருள் அறிபவன், ஆகிய மூன்றைக்குறிக்கும். இம்மூன்றையும் தள்ளி மிஞ்சினது தன்மயமாய் விளங்குமென்பர். "த்ரிஷ்ட தர்சனதர்சியாமித்யக்த்வா வாஸநயாஸஹ, தர்சனப்ரதமாபாஸ மாத்மாநம் கேவலம் பஜ" என்பது சுருதிவாக்கியம். 'பார்க்கிறவன், பார்வை, பார்க்கப்படுகிற வஸ்து இவைகளை வாஸனையுடன் தள்ளிவிட்டு விளங்குகிற சிரேஷ்டமான ஆத்மாவையே பஜி' என்பது இதன்பொருள்.

4. ஈசுவரன் சொன்னதாவது—கைவல்யமா யும் சாஸ்வதமாயுமிருக்கும் சாக்ஷாத் பிரஹ்மம் என்றால் உபதேசிக்கப்படில் (உன்)பிள்ளை மகா வைராக்கியத்தால் (சகலத்தையும்) விடுத்துத் தானே பிரகாசத்தை யடைவான்.

5-6. வேதவியாசர் சொன்னதாவது—அது எப்படியாகிலும் ஆகட்டும். உபநயன கர்மத் தில் என்புத்திரன் பிரஹ்மோபதேசம் பெரு வானாகில் தங்கள் பிரசாதத்தால், ஓ மகேசுவர னே, சீக்கிரம் சர்வஞ்ஞனாவான். தங்கள் பிர சாதத்தை யடைந்தவனாகி நான்குவிதமாகிய (பத) முக்தியை யடைவான்.

7. வியாசரின் வாக்கியத்தைக் கேட்டு, தேவர்களும் ரிஷிகளும் சேர்ந்த அக்கூட்டத் தில் சாம்பசிவனானவர் திவ்யாசனத்தில் சந் தோஷத்துட னிருந்துகொண்டு உபதேசம் செய்யத் தொடங்கினார்.

8. பக்திமானும் கிருதகிருத்தியருமாகிய சுகரானவர் அவர் சமீபத்தையடைந்து அவரி டம் பிரணவத்தை யடைந்து பிறகு பின்வரு மாறு சொன்னார்.

9-11. ஸ்ரீசுகர் சொன்னதாவது:—தேவர்க ளுக்கெல்லாம் ஆதியாகிய தேவனே, சர்வஞ்ஞ னே, சச்சிதானந்த லட்சணத்தை யுடைய வனே, உமாபதியே, சர்வ பூதங்களுக்கு மீசுவ ரனே, கருணாநிதியே, நீர் கிருபைவைக்க வே ண்டும்; உம்மால் பிரணவத்தில் அந்தர்கதமான (உண்ணிற்கும்) மேன்மையாகிய பரப்பிரஹ்ம மானது உபதேசிக்கப்பட்டது. தத்துவமசிமுத லிய வாக்கியங்களுடையவும், பிரஞ்ஞை முதலிய வைகளுடையவும் ஷடங்கங்களை (ஆறங்கங்களை) விசேஷமாய், கிரமப்பிரகாரம், உண்மையான படி கேட்க இச்சிக்கிறேன். அவ்விரகசியங்களை ஓ! சதாசிவனே, கிருபையால் நீர் இப்பொழுது சொல்லவேண்டுமென்றார்.

12. ஸ்ரீசதாசிவர் சொல்கிறார்.—மிகவும் நல்லது, ஓ மகாபுத்திமானும் ஞானநிதியுமாகிய சுகமுனியே, உம்மால் கேட்கப்பட்டதான வே தத்தின் ரஹஸ்யமானது கேட்கப்படவேண்டி யதே.

13. எதை யறிந்தமாத்திரத்திலேயே சம் சயமின்றி சாக்ஷாத் மோக்ஷமே கிடைக்குமோ (அந்த ரகஸியத்தை) ரஹஸ்யோபநிஷத் என் னும் பேரால் ஷடங்கங்களுடன் சொல்லு கிறேன் (கேள்.)

14. இவ்வங்கங்களில்லாமல் (மகா) வாக்கி யங்களை குருவானவர் உபதேசிக்கக் கூடாது; ஷடங்கங்களோடு கூடியே மகா வாக்கியங்கள் எல்லாவற்றையும் உபதேசிக்க வேண்டும்.

15. நான்கு வேதங்களுக்கும் எவ்விதம் உபநிஷதங்கள் சிரசாகுமோ, அவ்விதமே இவ் விரகசியோபநிஷத்தும் உபநிஷதங்களுக்கெல் லாம் சிரசாகும்.

16. ரகஸ்யோபநிஷத்தாகிய பிரஹ்மமானது எந்த புத்திமானால் தியானம் செய்யப்படுமோ அவனுக்கு புண்ய காரணமாகிய தீர்த்தங்களா லும், மந்திரங்களாலும், சுருதிகளாலும் (வேதாங்களாலும்) ஜபங்களாலும் என்ன பிர யோஜனம்!

17. நூறு வருஷம் (மகா) வாக்கியார்த்த விசாரத்தால் எந்தை யடைவானோ அது ரிஷி திபர்னம் இவைகளோடு கூடி ஓர் தடவை ஜபிப் பதால் (கிடைக்கும்.)

18. ஓம் இந்த ஸ்ரீ மகாவாக்கிய மகா மந் திரத்திற்கு ஹம்சன் ரிஷி; அவ்யக்த காயத்திரீ சந்தஸ்; பரமஹம்சன் தேவதை; ஹம் பீஜம்; ஸம் சக்தி; ஸோஹம் கீலகம்; என்னால் பரமஹம் சனை பிரீதி செய்யும் பொருட்டு மகாவாக்கிய ஜபத்தில் விநியோகம்.

(1) சத்யம் ஞானம் அனந்தம் பிரஹ்ம அங்குஷ்டாப்யாம் நம:,

(2) நித்யானந்தோ தர்ஜனீப்யாம் ஸ்வாஹா!

(3) நித்யானந்த மயம் பிரஹ்ம மத்தியமாப்யாம் வஷட்.

(4) யோவை பூமா (எல்லாமாயிருப்பது அல்லது மேன்மையானதும் ஆகிய பிரஹ்மம்,) அநாமிகாப்யாம் ஹும்!

(5) யோவை பூமாதிபதி: (எல்லாவற்றிற்கும் அதிபதி) (எதுவோ) கனிஷ்டி காப்யாம் வௌஷட்.

(6) ஏகமேவாத்விதீயம் பிரஹ்ம கரதல கர பிருஷ்டாப்யாம் பட்.

(i) சத்யம் ஞானம் அநந்தம்பிரஹ்ம ஹிருதயாய நம:.

(ii) நித்யாநந்தோ பிரஹ்ம சிரசேஸ்வாஹா! [ட்.
(iii) நித்தியானந்த மயம் பிரஹ்ம சிகாயைவஷ
(iv) யோவை பூமா கவசாய ஹும், [வௌஷட்
(v) யோவை பூமாதிபதி: நேத்திரதிரயாய
(vi) ஏகமேவாத்விதீயம் பிரஹ்ம அஸ்திராய
பூர்புவஸ்ஸுவரோம் இதி திக்பந்த: [பட்.
த்யானம்:—நித்யாநந்தம் பரமசுகதம் கேவலம் [ஞான மூர்த்திம்
விசுவாதீதம் ககன சத்ருசம் தத்துவஸ்யாதி [லக்ஷியம்
ஏகம் நித்யம் விமலமசலம் சர்வதீ சாக்ஷிபூதம்
பாவாதீதம் த்ரிகுணாரஹிதம் சத்குரும் தம்ந [மாமி.

[நித்யானந்தராயும், பரம சுகத்தைக்கொடுப்பவராயும், கேவலராயும், ஞானஸ்வரூபியாயும், ஜகத்துக்கெல்லாம் அப்பாற்பட்டவராயும், நிர்மலராயும், சலன மற்றவராயும், சகல புத்திகளிலும் சாக்ஷியாய் நிற்பவராயும், பாவனாதீதராயும், முக்குணங்களு மற்றவராயுமிருக்கும் சற்குருவை நமஸ்கரிக்கின்றேன்.]

20. மகா வாக்கியங்கள் நான்காகும். அவை யாவன:—

1. ஓம் பிரஞ்ஞானம் பிரஹ்ம,
2. ஓம் அஹம்பிரஹ்மாஸ்மி,
3. ஓம் தத்துவமஸி,
4. ஓம் அயமாத்மாபிரஹ்ம.

21. தத்துவமஸி யென்கிற அபேத வாசகமாகிற இதை யார் ஜபிக்கிறார்களோ அவர்கள் சிவசாயுஜ்ய மாகிய முக்தியை யடைவார்கள்—

22. தத்பதமாகிய மகா மந்திரத்திற்கு

பரமஹம்சன் ரிஷீ,
அவ்யக்த காத்ரீ சந்தஸ்;
பரமஹம்சன் தேவதை,
ஹம் பீஜம்;
ஸ: சக்தி;
ஸோஹம் கீலகம்;

எனக்கு சாயுஜ்ய முக்தியின் பொருட்டு ஜபத்தில் விநியோகம்.

தத்புருஷாய அங்குஷ்டாப்யாம் நம:-
ஈசானாய தர்ஜனீப்யாம் சுவாஹா;
அகோராய மத்யமாப்யாம் வஷட்;
சத்யோ ஜாதாய அநாமிகாப்யாம் ஹும்;
வாமதேவாய கநிஷ்டிகாப்யாம் வௌஷட்;
தத்புருஷ, ஈசான, அகோர, சத்யோஜாத, வாமதேவேப்யோ நம: கரதலகரபிருஷ்டாப்யாம் பட்.

இவ்விதம் ஹிருதயாதி நியாசம்.
பூர்புவஸ்ஸுவரோம் என்று திக்பந்தம்.

**தியானம்:—**

ஞானம் ஞேயம் ஞானகம்யாதீதம் சுத்தம் புத்தம் முக்தமவ்யயஞ்ச,
சத்யம் ஞானம் சச்சிதானந்த ரூபம் த்யாயே தேவம் தன்மஹோ பிராஜமானம்.

[ஞானமாயும், ஞேயமாயும், ஞானத்தாலடையப்படுவதற்கு அதீதமாயும், சுத்தமாயும், ஞான ரூபமாயும், முக்தமாயும், அழிவற்றதா

யும், சத்யமாயும், ஞானமாயும், சச்சிதாநந்த ரூபமாயும் மகாப் பிரகாசமானதுமான அத்தேவதையை தியானம்செய்கின்றேன்.]

துவம்பத மகா மந்திரத்திற்கு
விஷ்ணு ரிஷி;
காயத்ரீ சந்தஸ்;
பரமாத்மா தேவதை,
ஐம் பீஜம்;
க்லீம் சக்தி; ஸௌஃ கீலகம்;
என் முக்தியின்பொருட்டு ஜபத்தில் விநியோகம்;

வாசுதேவாய அங்குஷ்டாப்யாம் நமஃ;
சங்கர்ஷணாய தர்ஜனீப்யாம் ஸ்வாஹா;
பிரத்யும்நாய மத்யமாப்யாம் வஷட்;
அநிருத்தாய அநாமிகாப்யாம் ஹும்;
வாசுதேவாய கனிஷ்டிகாப்யாம் வௌஷட்;
வாசுதேவ சங்கர்ஷண் பிரத்தியும்ன அநிருத்தேப்யஃ கரதல கரபிருஷ்டாப்யாம் பட்;
இவ்விதமே ஹிருதயாதி நியாசமும்; பூர்புவஸ் ஸுவரோம் என்று திக்பந்தம்.

25. தியாநம்:—

ஜீவ த்வம் சர்வபூதானாம் சர்வத்ராகண்ட விக்ரஹம்,!
சித்தாஹங்கார யந்தாரம் ஜீவாக்யம் துவம் பதம்பஜே!!

[சகல பூதங்களுக்கும் ஜீவத்துவ மானவனும், எங்கும் அகண்டரூபியாயும், சித்த அகங்காரங்களை நடத்துபவனும் இருக்கும் ஜீவனென்று சொல்லப்படும் துவம் பதத்தை பஜிக்கின்றேன்.]

26. அசிபத மகாமந்திரத்திற்கு
மனம் ரிஷி;
காயத்ரீ சந்தஸ்;
அர்த்தநாரீசுவரர் தேவதை;
அவ்யக்தாதி பீஜம்;
நரசிம்ஹம் சக்தி;
பரமாத்மா கீலகம்;
ஜீவ்ப்பிரஹ்ம ஐக்யத்தின் பொருட்டு ஜபத்தில் விநியோகம்.

பிருதிவீ த்வயணுகாய அங்குஷ்டாப்யாம் நமஃ.
அப் த்வயணுகாய தர்ஜனீப்யாம் ஸ்வாஹா
தேஜோ த்வயணுகாய மத்யமாப்யாம் வஷட்
வாயு த்வயணுகாய அநாமிகாப்யாம் ஹும்
ஆகாசத்வயணுகாயகனிஷ்டிகாப்யாம்வௌஷட்.
பிருதிவ் யப் தேஜோ வாயு வாகாச த்வயணுகேப்ய காதலகாபிருஷ்டாப்யாம் பட்.

பூர்ப்புவஸ்ஸுவரோமிதி திக்பந்தஃ

27. தியானம்:—

ஜீவோ பிரஹ்மேதி வாக்யார்த்தம் யாவதஸ்தி மனஸ்திதிஃ
ஐக்யம் தத்வம்லயே குர்வன் தியாயேதஸிபதம் ஸதா!!—

[ஜீவன் பிரஹ்மம் என வாக்கியார்த்தத்தில் எதுவரையில் மனம் நிற்குமோ அதுபரியந்தம் (மனோ) லயத்தில் ஜீவன் பிரஹ்மம் இதன் இரண்டின் ஐக்கிய தத்துவத்தை அநுசந்தானம் செய்துகொண்டு "அஸி" பதத்தைத் தியானம் செய்யவேண்டும்.]

இவ்விதம் மகாவாக்கிய ஷடங்கங்கள் சொல்லப்பட்டன.

(இன்னும் வரும்.)

மு. கோ. நாராயணசாமி ஐயர்.

---

## Kannaki—A Social Drama.

### கண்ணகி.

அங்கம் III] [காட்சி-5.

இடம்—வையை ஆற்றின் கரையில் உள்ள ஒரு நந்தவனம்; வையை ஆற்றின்கரை.

காலம்—விடியற்காலம்

பாத்திரர்— கண்ணகி, கோவலன், கௌந்தி, கௌசிகன்

கோவலன்:—(கண்ணகியை நோக்கி) கண்மணி! நாம் ஐயைகோட்டத்தை விட்டுப் புறப்பட்டு நெடுந் தூரம் வந்துவிட்டோம்!

கௌந்தி:—ஆமாம்; பாணர்கள் சொன்ன வையை ஆறு இதுதான் போலும்! (ஆற்றைக் கையால் காட்டுகிறாள்.)

கண்ணகி:—மாதுஸ்ரீ! அந்தப் பாணர்கள் நம்மிடம் எவ்வளவு அன்பும் பட்சமும் காட்டிப் பேசினார்கள்; பார்த்தீர்களா!

கௌந்தி:—பாண்டிய நாட்டில் புலியும் மானும் ஒரு துறையில் நீர்குடிக்கிறதென்றால் அவர்கள் நம்மிடம் அன்பு காட்டியது ஒரு ஆச்சரியமா? "அரசனெவ்வழி குடிகளவ்வழி" என்னும் பழமொழியை நீ கேட்டதில்லையா? எல்லாவற்றுக்கும் அரசனுடைய செங்கோலே காரணம்!

கோவலன்:—(கௌந்தியை நோக்கி) மாதுஸ்ரீ, கதிரவனுதிக்குந் தருணமாயிற்று! நாம் இந்த நந்தவனத்தில் தங்கிக் காலைக்கடன்களை முடித்துக்கொண்டு பின்பு அக்கரை சென்று மதுரையை அடையலாமென்று நினைக்கிறேன்! தங்களுடைய சித்தம் எப்படி?

கௌந்தி:—ஆஹா! உன்னுடைய இஷ்டப்படியே செய்யலாம்.

கண்ணகி:—இந்த நந்தவனத்தைச் சுற்றிப்பார்த்து இங்குள்ள அற்புதங்களையும் அதிசயங்களையும் கண்டு ஆனந்தித்துச் செல்லலாமென்றே நானும் விரும்புகிறேன்!

கோவலன்:—ஆனால் சரி; நீங்களிருவரும் இந்த நந்தவனத்திலேயே இருங்கள்! நான் ஆற்றுக்குச் சென்று சந்தியாவந்தனம் முதலிய நித்திய கருமானுஷ்டானங்களைச் செய்து முடித்துக்கொண்டு ஒரு நொடியில் திரும்புகிறேன்.

கௌந்தி:—கோவலா! அப்படியே செய்.

கோவலன்:—ஜாக்கிரதையாயிருங்கள்! நான்போய் வருகிறேன்! (ஆற்றுக்குப்போகிறான்.)

கௌசிகர்:—(ஆற்றங்கரையின் ஒரு பக்கத்தில் நின்று தனக்குள் சொல்லிக் கொள்ளுகிறார்) நாமோ கோவலனைத்தேடிப் பலவிடங்களுக்குச் சென்றும் அவனைக் காணாமல் கடைசியாக இங்கு வந்திருக்கிறோம்! இங்காவது அவனைப் பார்க்கின்றோமோ இல்லையோ! இருக்கட்டும்! அதோ ஒரு சுந்தர புருஷன் ஆற்றை நோக்கி வந்துகொண்டிருக்கிறான்! அவன் ஒருகால் கோவலனாக இருந்தாலும் இருக்கலாம்! எல்லாவற்றிற்கும் நாம் அந்தக் குருக்கத்தி மரத்தினடியில் சென்று தங்குவோம்! (கரையோரமாயுள்ள ஒரு மாதவி மரத்தின் நிழலில் தங்குகிறார்.

கோவலன்:—(ஆற்றையடைந்த பின்பு தன் காதலியோடு கானகத்தில் நடந்து வந்த கஷ்டத்தை நினைத்து வருந்தித் தானேபுலம்புகிறான்) ஆ! சிவமே! ஜெகதீசா! உன்னுடைய திருவிளையாடலை நான் என்னென்று சொல்லுவேன்! நான் பிறந்தது எங்கே! வளர்ந்தது எங்கே! இப்போதிருப்பது எங்கே! இவைகளை யெல்லாம் நினைக்கும்போது என் மனம் பகீரென்கின்றதே! நான் எதை நினைந்தழுவேன்! அன்பினிற் சிறந்த வென் னுருயிர்த்தந்தை மைந்தனை மெனக்கு மகிழ்மண முடித்ததை நினைந்தழுவனோ! கற்பினுக் கரசியாம் கண்ணகி தானும் பாவியேனிந்தக் கோவலன் தன்னால் கொடுந்துயரெய்திய கொடுமை நினைந்தழுவனோ! கள்ள வொழுக்கமே தெள்ளிதென் றெண்ணிய மங்கை மாதவியின் பொய்த்திறம் நினைந்தழுவனோ! அக்கணிகைச் சிறுக்கியின் சிறுமை யுணராத வென் புல்லறிவு நினைந்தழுவனோ! கல்லினும் முள்ளினும் புல்லினும் புதரினும் என்னருங்காதலி எய்திய துயர் நினைந்தழுவனோ! கண்மணி போன்றவென் கண்ணகி தன்னின் காற்சிலம்பதனை விலையது கூறியே விற்றிட ஈசன் விதித்த விதியினை நினைந்தழுவனோ! யான் எதை நினைந்தழுவேன்! எதுதான் செய்வேன்! (கண்ணீர் சொரிய

மௌனத்தோடு பூமியைப் பார்த்தபடியே யோசிக்கிருன். அவனுடைய சரீரம் வெளுத்துப்போயிற்று.)

**கௌசிகர்:**—(தனக்குள்) அதோ ஆற்றங்கரையில் நிற்பவனுடைய நிற வேறுபாட்டையும் மன வேறுபாட்டையும் நோக்குங்கால் அவன்தான் கோவலனாக இருக்கவேண்டும் என்று நினைக்கிறேன். எல்லாவற்றிற்கும் நம்முடைய சந்தேகம் தெளிய ஒரு யுக்தி செய்யலாம்! (கோவலன் காதில் விழும்படியாகத் தாம் நின்ற குருக்கத்தி மரத்தைப்பார்த்துச் சொல்லுகிருர்) ஏ! மாதவியே! கோவலன் பிரிவினுக்கு ஆற்ருது காமத்தீயால் துயரமுற்று, அது முதல் இதுவரையில் வருந்தி வருகின்ற மாதவியைப்போல, இளவேனில் நீங்க அதற்கு ஆற்ருது முதுவேனிற் காலத்து வெயிலால் மாதவியாகிய நீயும் வருந்தி நிற்கின்ருய் போலும்! அந்த மாதவியின் பெயரை நீயும் அடைந்திருத்தலால் உனக்கும் அவளுடைய குணங்கள் இருக்கின்றன! (இங்கு மாதவி என்னும் வார்த்தை தாசியாகிய மாதவிக்கும், குருக்கத்திற்கும் பொதுவாக நிற்பது கவனிக்கத்தக்கது).

**கோவலன்:**—(கௌசிகர் சொன்ன இந்த வார்த்தை காதில் பட்டவுடன் அவரை அணுகச்சென்றுமிருந்த பரபரப்புடன்) ஐயா! தாம்யார்! இந்த மரத்தைப்பார்த்து என்னமோ சொன்னீரே; அதன் பொருளென்ன? (என்று ஆவலுடன் கேட்டான்).

**கௌசிகர்:**—அப்பா! ஒன்றுமில்லை! இந்த மரத்தைப் பார்த்தவுடன் கோவலன் என்பான் ஒருவனைப் பிரிந்து வருத்தப்பட்டுக் கொண்டிருக்கும் ஒரு நங்கையின் ஞாபகம் எனக்கு வந்தது! அதன்மேல் ஏதோ உளறியிருப்பேன்!

**கோவலன்;**—அந்த நங்கை யார்? அவள் எப்படிப்பட்டவள்? அவள் பெயரென்ன?

**கௌசிகர்:**—அவளுடைய அழகைச் சொல்லுவதென்ருல் ஆயிரம் நாவு படைத்த ஆதிசேஷனாலும் முடியாது! இருந்தபோதிலும் என் சிற்றறிவிற்கு எட்டிய மட்டும் ஒருவாறு அவளுடைய அழகைச் சொல்லுகிறேன்! நீ கவனமாய்க் கேட்பாயாக!

"அறனெறித்தன்ன செறிகுழற் கற்றையும்,
பிறைசெறித்தன்ன நறைகமழ் நுதலுங்,
கயலிணைத்தன்ன வகலிரு விழியுங்,
குமிழை முகிழ்த்தன்ன வமைவரு நாசியும்,
பளிங்கினன்ன துளக்கொளிக் கதுப்பும்,
வள்ளையன்ன தெள்ளொளிச்செவியும்,
குலிகந்தோய்த்த விலவுறழிதழும்,
முறுவல் பூப்ப மின்னென மிளிருங்,
குறு முத்தன்ன சிறு முள்ளெயிறுங்,
கொழுநீர்ப்பணிலத்து விழுமிய கழுத்துஞ்
சிவிறி விரித்தன்ன சிறுதிருவடியும்"

உடையாள் அந்த நங்கை! அவள் பெயர் மாதவி! அவள் விலைமகளாயினும் குலமகளினுஞ் சிறந்த கற்பினை யுடையாள்! கோவலன் என்பவனைத் தன் மனத்திலே எழுதி அழகுபெறப் பார்க்கும் பாவை நல்லாள்! கற்பினுக்கரசி! குணத்தினுக் குறைவிடம்! காதற் களஞ்சியம்! அன்பின் பொக்கிஷம்! பெண்கள் நாயகம்!

**கோவலன்:**—அந்த மாதவிக்கு இப்போதென்ன சம்பவித்து விட்டது?

**கௌசிகர்:**—ஐயா! அவளுடைய காதலனான கோவலனென்பான் அவளை விட்டுப் பிரிந்த துயரத்தால் அவள்மிகவும் மனம்வருந்தி ஊணுறக்கமின்றிப் பாயும் படுக்கையுமாயிருந்து அழுதகண்ணும் சிந்திய மூக்குமாய் சதா சர்வகாலம் பினற்றிக் கொண்டிருக்கிருள்! அவள்தான் அப்படி என்ருல்; கோவலனுடைய தாயுந் தகப்பனும் படும் துயரத்தைக் கண்ணால் பார்க்கமுடியவில்லை! அவர்கள் நாலா பக்கத்திலும் ஆட்களை விட்டுத் தேடச் சொல்லியிருக்கிருர்கள்! ஊர் ஜனங்களோ அக்கோவலன் பிரிவாற்ருது மனமுடைந்து துக்க சாகரத்தில் மூழ்கி யிருக்கிருர்கள்! அரிய மாணிக்கத்தை இழந்து விட்ட நாகம் போலவும், இனிய உயிரை இழந்து விட்ட உடலைப் போலவும் அவனுடைய சுற்றத்தார் துயரக்கடலில் ஆழ்ந்திருக்கின்ருர்கள்! அந்தக் கோவலனைத் தேடியே நானும் செல்லுகிறேன்!

**கோவலன்:**—ஐயா! அந்தக் கோவலன் என்பவன் நானே!

**கௌசிகர்:**—(ஆச்சரியத்துடன்) ஆ! அப்படியா! மிகவும் நலமாயிற்று! கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்ததுபோல் தாங்களே வந்து விட்டீர்கள்! (மடியிலிருந்த கடிதத்தை எடுத்துக் கோவலன் கையில் கொடுத்து) ஐயா! இதை மாதவி உங்களிடம் கொடுக்கச் சொன்னாள்! தயை செய்து என்காதில் விழும்படிச் சற்று உரக்கவே வாசியுங்கள்!

**கோவலன்:**—(அக்கடிதத்தை வாங்கிப் பிரித்துப் பார்த்துவிட்டு) ஆஹா! அப்படியே வாசிக்கிறேன்! (கடிதத்தை உரக்கப்படிக்கிருன்.)

241-கணிகையர் வீதி; காவரிப்பூம்பட்டினம்.

18-7-கி. மு. 6-வது வருஷம்.

அன்பிற் சிறந்த ஆருயிர்க் கோவலா!

தேவரீர் திருவடிகளைத் திக்குநோக்கித் தண்டம் பண்ணித் தங்கள் காதலியாகிய மாதவி செய்துகொள்ளும் விஞ்ஞாபனம்! கற்பிற்சிறந்த கண்ணகியுடனே இரவில் புறப்பட்டுத் தாங்கள் நகர் நீங்கினீர்கள் என்ற செய்தியை என்தோழி வசந்தமாலை மூலமாக நான் கேள்விப்பட்டேன்! அதுமுதல் என்

மனம் அனலிலிட்ட மெழுகுபோல உருகுகின்றது! தங்களுடைய பெற்றோர்களைத் தவிக்கவிட்டு ஒருவருக்குந் தெரியாமல் வெளிப் புறப்படவேண்டிய காலம் தங்களுக்கும் வரவேண்டுமோ? அடியாள் செய்த பிழையின்பொருட்டுத் தாங்கள் சென்றிருந்தால் என்மனம் இன்னும் வருத்தத்தை யடையும்! அப்படியே நான் குற்றம் செய்திருந்தபோதிலும் அறிவிற் சிறந்த தாங்கள் அதைப் பாராட்டாமல், பெண்களுக்குப் பேதமையென்பது இயல்பாகவே உண்டானது என்றுகொண்டு என்னை மன்னிக்கும்படித் தங்களை வேண்டுகிறேன்! தங்களை இனி எப்போது பார்க்கப் போகிறேன் என்னும் ஏக்கமே எனக்கு அதிகமாயிருக்கிறது! உங்களைக் கனவில் காணலாமென்றாலும் முடியவில்லை! ஏனெனில் நித்திரையில்லாததால் கனவு காண்பதற்கு மார்க்கமில்லை! உங்களைப் படத்திலெழுதிப் பார்க்கவும் சக்தியற்றவளாய் இருக்கிறேன்! ஏனெனில் உங்களுடைய திருவுருவத்தைப்போல் படத்திலமைப்பது எந்த ஓவியக்காரருக்கும் சாத்தியமாகாத விஷயம்! அப்படியே ஒருகால் உங்களைப்போல் படத்தில் எழுதிவிட்டாலும், ஊற்றிலிருந்து நீர் பெருகுவதுபோல என் கண்களிலிருந்து இடையறாது பெருகும் கண்ணீரானது அந்தப் படத்தைப் பார்க்கமுடியாதபடி என் கண்ணொளியை மறைத்துவிடும்! ஆதலால் தங்களை நேரிற் காண்பதைவிட வேறு மார்க்கமில்லை! அறிவிற் சிறந்த தாங்கள் அடியாள்பொருட்டு மறுபடியும் ஊர்திரும்பி உங்கள் பெற்றோர்களின் துயரத்தை நீக்கி ஏழையாகிய நான்கொண்ட விரகதாபத்தையும் தணிக்கும்படியாகத் தங்களுடைய திருவடித் தாமரையைப் பற்றுகின்றேன்!

இங்ஙனம்,

தங்கள் உண்மைக்காதலி,

மாதவி.

**கௌசிகர்:**—சரி; இப்போது தாங்கள் என்ன சொல்லுகிறீர்கள்!

**கோவலன்:**—மாதவி உண்மை அன்புடையவள் என்று அறிந்தேன்! குற்றம் என் மீதே ஒழிய அவள் மீது இல்லை! இருந்தபோதிலும் நான் மதுரைக்குப் போய் வியாபாரம் செய்துவிட்டு சீக்கிரம் காவிரிப்பூம்பட்டினத்துக்குத் திரும்பிவருகிறேன்! மாதவி கொடுத்த இக்கடிதத்தை என்பிதாவிடம் காட்டி அவளை ஆதரித்துப் பாதுகாக்கும்படி நான் சொன்னதாகச் சொல்லுங்கள்! அவர்களையும் வருத்தப்படவேண்டாமெனச் சொல்லுங்கள்! மாதவிக்கும் வேண்டிய தேறுதல் கூறுங்கள்!

**கௌசிகர்:**—ஆஹா! அப்படியே! சீக்கிரம் வந்துவிடுங்கள்! நான் சென்று வருகிறேன்! (அவ்விடம் விட்டு நீங்குகிறார்.)

**கோவலன்:**—(நந்தவனம் சென்று நடந்த சங்கதியைக் கௌந்திக்கு உரைத்துவிட்டு) "இனி நாம் அக்கரை செல்லலாமே!" என்று கண்ணகியைக் கேட்கிறான்.)

**கண்ணகி:**—அப்படியே! அதோ ஓடக்காரர்கள் இருக்கிறார்கள்! ஓடத்திலேறிப்போகலாம்! புறப்படுங்கள்! (மூவரும் ஓடத்திலேறி அக்கரைசென்று மதுரையின் கிழக்குக்கோட்டை வாயிற் படியண்டை உள்ள ஒரு முனிவர் ஆச்சிரமத்தில் தங்குகிறார்கள்.)

[3-ம் அங்கம் 5-ம் காட்சி முற்றும்]

நாகை ஸி. கோபாலகிருஷ்ணன்.

---

## Sita-A Tale of Hindu Domertic Life.

## சீதா அல்லது இல்லறவாழ்க்கை.

### 31-வது அதிகாரம்.

இராமச்சந்திரய்யருக்கு பி. எல். பரீக்ஷை தேறிவிட்டது அவர் ஒருவருஷம் வேலை பழகிவிட்டு பிறகு சம்஼ாரம், காமேசுவரய்யர் முதலானவர்களுடன் திருச்சினாப்பள்ளியில் வக்கீல் வேலையாய் இருப்பதாக தீர்மானித்து வந்துவிட்டார். திருச்சினாப்பள்ளியில் ஆறு வருஷம் வக்கீல் வேலையாயிருந்ததில் அவருக்கு நல்ல வரும்படியும் அதிக செல்வாக்கும் ஏற்பட்டது. சீதாவை நல்லவளென்று கொண்டாடாதவர்கள் கிடையாது. இராமச்சந்திரய்யர் தாயாருக்கும் இராமச்சந்திரய்யருக்கும் பணிவிடைசெய்பவும் காமேசுவரய்யருக்கு தகுந்தபடி நடந்துகொள்ளவும் தெய்வ பக்தியோடுகூட நடக்கவும் அவளைப்போல் வேறொருவராலும் இருக்கமுடியாது. நல்ல சமயங்களில் வீட்டு போஜனையெல்லாம் இராமச்சந்திரய்யருக்கு நன்றாய் சொல்வாள். குடும்ப கணக்குகள் ஒன்று விடாமல் எல்லாம் எழுதிவைப்பாள். இராமச்சந்திரய்யர் யாருக்காவது கடிதம் எழுதவேண்டுமானால் சமாசாரம் மட்டும்தான் சொல்வார். மற்றதெல்லாம் சீதா தானே எழுதிவிடுவாள். இராமச்சந்திரய்யருக்கு வீட்டுவேலையே இருக்காது. தன் பையனுக்கு போதனை நன்றாய் செய்துவருவாள். சிலர் இங்கிலீஷ் படித்தாலும் அல்லது எழுத படிக்க தெரிந்தாலும் அது ஸ்திரீகளுக்கு அனர்த்தத்தை தான்விளைவிக்கும் என்கிறார்கள். இது சுத்தப் பிசகு. புருஷர்களுக்

கெல்லாம் எவ்வளவோ சுகத்தைத்தருகிறபடிப்பு ஸ்திரிகளுக்கு மட்டும் எப்படி கெடுதலை உண்டு பண்ணக் கூடும். கெடுதலை உண்டு பண்ணும் படிப்பெல்லாம் அரைகுறைப்படிப்பே அல்லாது வேறில்லை. அப்படிப்பு மிகவும் அபாயகரமானதுதான். ஏனென்றால் வெறும்பானை தான் கூப்பாடு அதிகமாக போடும். இப்படிப்பட்ட படிப்பை மட்டும் சொல்லித்தராமல் பெண்களுக்குத் தமிழ் பாஷையிலோ சம்ஸ்கிருத பாஷையிலோ இங்கிலீஷிலோ நல்ல புஸ்தகங்களையெல்லாம் வாசிக்கசெய்து அதிக பணம் செலவழித்தால் அது ஒருபோதும் வீணாகாது. படிப்பென்றால் பரிக்ஷை தேறுவதல்ல. இங்கிலீஷ்மட்டும் தெரிந்துகொள்ளுவதுமல்ல. எந்த பாஷையை எடுத்துக்கொண்டிருந்த போதிலும் அதை நன்றாய் படித்து அதிலிருக்கும் நல்ல விஷயங்களை யெல்லாம் படித்திருந்தால் அது ஒருபோதும் வீணாகமாட்டாது. சீதாவுக்கு இங்கிலீஷ் தமிழ் இரண்டும் நன்றாய் தெரியும். அந்த இரண்டுபாஷையிலும் அநேக நல்ல புஸ்தகங்கள் படித்திருக்கிறாள். மேலும் வளரும் குழந்தைக்குகொஞ்சம் கொஞ்சமாகத் தான் படிப்பில் எல்லாவற்றையும் நன்றாய்சொல்லி கொடுக்கலாமல்லவா? இப்படி இராமச்சந்திரய்யர் சீதாவுடன் வெகு சுகமாக இருந்துகொண்டு பூவரசநல்லூரில் தனக்கு வேண்டியவர்களுக்கெல்லாம் நல்ல ஒத்தாசை செய்துகொண்டும் இருந்தார். ஆனால் வெங்கடராம சாஸ்திரிகள் பிள்ளை முத்துசாமி அவன் வகைறாவுக்குமட்டும் அஸூயை நீங்கவில்லை. இப்படியிருக்க ஜெயிலில் அடைக்கப்பட்ட கைதிகள் சுப்பய்யன் வெங்கடராமசாஸ்திரிகள், நாராயணசாஸ்திரிகள் ஜெயிலில் ஜன்னலைப் பெயர்த்துவிட்டு வெளியே தப்பி ஓடிப் போய்விட்டார்களென்றும் அவர்களை மறுபடியும் பிடித்துக் கொடுப்பவர்களுக்கு நூறுரூபாய் தருவதாகவும் தண்டோராபோட்டார்கள். அத்துடன்முன் தூக்கிப்போடப்பட்டகிருஷ்ணசாமி அய்யருக்கு தூக்கில் போட்டதில் உயிர் போகவில்லையென்றும் அவனும் பிழைத்துகொண்டிருக்கிறானென்றும் அவனைப் பிடித்து கொடுப்பவர்களுக்கு எண்ணூறுரூபாய் இனாம் கொடுப்பதாகவும் தண்டோரா போட்டார்கள். இராமச்சந்திரய்யருக்கு இதை எல்லாம் கேட்க வெகு ஆச்சரியமாயிருந்தது. பூவரசநல்லூர்பக்கத்தில் சாத்தூர் என்ற ஒரு ஊர் இருக்கிறது. அந்த ஊரில் ஜமீன்தார்உண்டு. அவர்பெயர் தெய்வசிகாமணி முதலியார். அவர் மகா கபடசிகாமணி. அவருக்கு தான்மட்டும் வாழவேண்டும் மற்றவர்கள்எல்லோரும் கெட்டுப்போய்விடவேண்டுமென்கிற எண்ணம். நல்லநாகரீகமுள்ள இராஜாங்கங்களில்பணக்காரன் சுகமாக இருக்கவேண்டுமானால் குடிகள் புஷ்டியாய் இருக்கவேண்டுமென்று விரும்புவார்கள். நமது முதலியாருக்கு மட்டும் அப்படிப்பட்ட எண்ணம் இல்லை. எவனாவது ஒரு முதலி அல்லது பிள்ளை அல்லது குடியானவன் ஒரு ஏகரா நிலம் வாங்கிவிட்டால் அவனை மறுநாளே கூப்பிட்டு உன்னை குத்திவிடட்டுமா நிலத்தை எனக்கு சாசனம் செய்கிறாயா என்று கேட்பார். அவன் ஏழைஎன்ன செய்வான். இவருக்குபயந்துகொண்டு சாசனத்தை அவருக்கே பண்ணிவைத்து விடுவான். ஆனால் அவருக்குத்தான்மட்டும் எந்த நியாயத்தைக்கொண்டு அவ்வளவு பூமி வாங்கினார் என்றும் இவர் முதல் ஏகரா வாங்கும்போது ஓர் பிராமணன் அக்காலத்தில் பணக்காரனாயிருந்து இவரைக் கூப்பிட்டு முதலிப்பயலே எது பங்கு வாங்கஆரம்பித்துவிட்டாயா? என்று கேட்டால் அக்காலத்தில் தன் மனது எப்படியிருக்குமென்றும் இவர் யோஜிக்கவில்லை. உலகத்தில் படிப்பு அதிகரிக்க இராஜ்ஜியம் செழிக்குமென்று எல்லோரும் எண்ணி இருக்க இவருக்குமட்டும் படிப்பு என்பதே ஆகாது. தன் பிள்ளைகளுக்கு மட்டும் படிப்பு வேண்டுமேயல்லாது மற்றவர்களுக்கு படிப்புக் கூடாதென்பார். ஏனெனில் படித்துவிட்டால் படித்தவன் தனக்கு போட்டியாக வந்துவிடுவான். தன் அதிகாரத்தை குறைக்கப் பார்ப்பான். தனக்கு அடங்கமாட்டான். ஆகையால் படிப்பே ஆகாதுஎன்பார். உத்தியோகஸ்தர்களைக்கண்டால் அவர்களுக்கு ஆசாரஉபசாரம்செய்வான். ஷெடியூர் ரெவினியூஇன்ஸ்பெக்டரும் ஒரு இலக்ஷாதிபதியும் வந்தால் லக்ஷாதிபதியை பிக்ஷாதிபதிக்கு சமானமாக வைத்து ரெவினியூ இன்ஸ்பெக்டருக்கு ஆசாரம்உபசாரம்செய்வார். ஏனென்றால் அவனால் அவனுக்கு காரியம்ஆகவேண்டும். இவருக்குக் கோள்சொல்லுபவனைக்கண்டால்வெகு பிரியம். வெங்கடராமசாஸ்திகரின் தகப்பன் இந்த ஜமீன்தாரின் தகப்பனிடத்தில் மிக மரி

யாதையாய் இருந்துகொண்டு அவருக்கு ஊரில் பங்குசேர்த்துக்கொடுத்தார். அவர்செய்த உபகாரத்துக்காக தெய்வசிகாமணி முதலியார் வெங்கடராமசாஸ்திரிகள்மீது வெகு பிரியமாயிருந்தார். வெங்கடாராமசாஸ்திரிகள் பிரியமாய் இருப்பதை கண்டு காவாலி சுப்பய்யன் கேலி செய்வான். முதலியை லட்சியம் செய்து குடியானவனிடத்தில்போய் அவனைஸ்தோத்திரம் செய்து பிழைப்பார்களா என்று கேலி செய்துவந்தார். வெங்கடராம சாஸ்திரிகள் முதலில் முதலியாரிடத்தில் சலீசாய் நிலம் குத்தகைக்கு வாங்க ஆரம்பித்தார். குத்தகை பாக்கிக்காக துலுக்க சேவகனை முதலியார் அனுப்பினால் ஊரில் முதலியார் தன்பேரில் பிரியத்தினால் சேவகனை விட்டு ரகசியம் பேச கூட்டிவரச்சொல்லி இருக்கிறானென்றுபெருமை சொல்லிகொள்வார். பிரியம்உண்டானால் மரியாதையாக கடிதம் எழுதக்கூடாதா. வாரண்டு சேவகனை அனுப்புவது போல் அனுப்புவானேன். இதைஅறியாத அந்த ஊர் ஜனங்கள் எப்படியிருந்தபோதிலும் முதலியாருக்கு வெங்கடராம சாஸ்திரிகளிடம் பிரியம் பிரியம்தான் என்று சொல்லி தாங்களும் அப்படி இருக்க கொடுத்துவைக்கவில்லையே என்று மனதில் அஸூயைபடுவார்கள். உடனே சாத்தூருக்குபோய் முதலியார் குத்தகை பாக்கிக்கு கண்டிக்க வெங்கடராம சாஸ்திரிகள் அவருக்கு நமஸ்காரம்செய்து பின்னால் கொடுப்பதாக கெஞ்சி கேட்டுகொண்டுவருவார். பூவரசநல்லூருக்கு வந்ததும் எல்லோரிடத்திலும் முதலியார் தன்னை பக்கத்தில் உட்கார்த்திக்கொண்டு வெகுநேரம் பேசினார் என்று பெருமை சொல்லிக்கொள்வார். ஒருவன் ராஜா என்னோடு பேசினாரென்று பெருமை அடித்துக்கொண்டுஎல்லோரிடத்திலும் சொல்லிக்கொண்டான். ஊரில் எல்லோரும் அவன் ராஜாவுக்கு வேண்டியவன்போல் இருக்கிறது. என்று மரியாதை செய்ய ஆரம்பித்தார்கள். பிறகு ஒரு நாள் வேறொரு மனிதன் அவனைக் கூப்பிட்டு அப்பா ராஜா உன்னோடு என்ன பேசினானென்றார். அவன் ஒன்றுமில்லை ராஜா போகும்போது வீதியில் நான் நின்றுகொண்டிருந்தேன் ராஜா உடனே என்னை பார்த்து சீ நாயே ஒதுங்கிப் போவென்று ராஜா என்னோடு பேசினாரென்றான். அதுபோல் வெங்கடராம சாஸ்திரிகள் முதலியாரிடத்தில் போய் கையைக் கட்டி வாயை பொத்தி வெளியில் நின்றபோதிலும் வெளியில் வந்து தான் முதலியாருக்கு வெகு ஆப்தீக சிநேசிதம் என்பார். ஆப்த சிநேகித் மென்பதுகூட முதலியாரை நினைக்கும்போதே ஆப்தீகமென்று பயத்தால் உளரிவிடும். ஒருவேளை முதலியார் வீட்டு ஆப்தீகத்துக்கு இருப்பதாகத்தான் சிநேகமோ என்று சிலர் சந்தேகிப்பார்கள். வெங்கடராம சாஸ்திரிகள் இப்படி கொஞ்சநாளிருந்து பிறகு நமக்கு இந்தவேலை கட்டாதென்று நாரதருடைய உத்தியோகத்தையும் சேர்த்துக்கொண்டார். அதற்கு தான் மட்டும் போதாதென்று காவாலி சுப்பையனையும் தன்கக்ஷியில் சேர்த்துக்கொண்டார். உடனே இருவருக்கும் தகுந்த வேலை ஏற்பட்டது தினந்தோறும் சாத்தூருக்கு போவதும் அங்கே முதலியாரிடத்தில பூவரசநல்லூரில் தனக்கு ஆகாத பணக்காரர்களபேரில் எல்லாம் கோள் சொல்லுகிறதும் அவர்கள் முதலியாரை தூஷித்ததாகவும் அவர்களுக்கு ஏதாவது கெடுதலை செய்யவேண்டுமென்றும் சொல்லிக்கொடுப்பார். முதலியாருக்கு பூவரசநல்லூரிலுள்ள நல்லபணக்காரர்களிடத்தில் எல்லாம் நல்ல மதிப்பு இருந்தது. வெங்கடராம சாஸ்திரிகள் சுப்பய்யன் இருவரும் அந்த மதிப்பை கெடுத்துவிட்டார்கள். மரத்தை வெட்டுவதற்கு மரமே தன் ஜாதியைவிட்டு கோடாலிக்கு பிடியாய்ப்போய் கோத்துக்கொண்டு மரத்தைவெட்ட ஒத்தாசை செய்வதுபோல் பூவரசநல்லூருக்கு வெங்கடராமசாஸ்திரிகள் சுப்பய்யன் இவர்கள் குலத்தைக் கெடுக்கவந்த கோடரிக் காம்பு ஆனார்கள். ஆகையால் அவர்கள் ஜெயில்போய் இருக்கதில் ஊரில் எல்லோருக்கும் சந்தோஷம். முதலியார் கோள் சொல்லுகிறவர்கள்மீது பிரியமாயிருப்பதைப் பார்த்து வெங்கட்ராம சாஸ்திரிகள் குமாரன் முத்துசாமி தன் போஸ்டாபீசு வேலையைக்கூட விட்டுவிட்டு இவரிடம்போய் அமர்ந்துகொண்டான். இவனுக்கு வேறே வேலை கிடையாது. தினந்தோறும் இன்ன மனிதர்கள் இவர்களை தூஷித்தார்களென்றும், பூவரசநல்லூரில் இன்ன விசேஷம் நடந்ததென்றும் சொல்வதே வேலை. பூவரசநல்லூரில் தெய்வசிகாமணி முதலியாருக்கு நிலம் ஏராளமாயிருந்தது. அந்த நிலங்களைப்பார்க்கும் ஏஜண்டின்மீதும் முத்துசாமி

ஏதாவது கோள் சொல்லிக்கொண்டே இருப்பான். ஊருக்கு ஜனங்களுக்கு ஒரு காரியம் சுகமென்றால், அது முத்துசாமி அய்யருக்கும் அவர் சொல்லை கேட்கும் தெய்வசிகாமணி முதலியாருக்கும் பெரிய கஷ்டம். தெய்வசிகாமணி முதலியார் சுபாவத்தில் நல்லவராயிருந்தும் அவரை முத்துசாமி அய்யர் கெடுத்து அந்த ஊர் ஜனங்களுக்கும் ஜமீன்தாருக்கும் ஆகாமல் செய்துவிட்டார். இராமச்சந்திரய்யர் தான் சம்பாதித்ததைக்கொண்டு ஓர் கோவில் கட்டலாமென்று யோஜித்தார். உடனே அது விஷயத்தில் முத்துசாமி அய்யர் மூலமாய் ஜமீன்தாருக்கு ஒரு அலமையை விழுந்து விட்டது. இப்படியிருக்க அந்த ஊர்ப்படுகையில் கோவிலுக்காக சலீசாய் 2000ரூபாய்க்கு மரம் ஏலமெடுக்க ராமச்சந்திரய்யர் யோஜித்தார். இது தெரிந்த் ஜமீன்தார் ராமச்சந்திரய்யருக்கு முன்னமேதான் மனுப்போட்டுக்கொண்டு ஓவர்சியர் முதலியவர்களுக்கு நல்ல இனம் கொடுத்து அம்மரங்களை 1500 ரூபாய்க்கு ஏலமெடுத்துவிட்டார். ராமச்சந்திரய்யருக்கு இது விஷயத்தில் வெகு வருத்தம் வந்துவிட்டது. நான் தர்மத்துக்கு செய்யவேண்டுமென்று யோஜித்து ஜமீன்தாருக்கு இது விஷயம் தெரிவித்திருக்க அதற்கு ஒத்தாசை செய்வதைவிட்டு ஜமீன்தார் விரோதமாகக் கிளம்பினதைக்கண்டு ராமசந்திரய்யர் உடனே சர்க்காருக்கு ஜமீன்தார் 5000 ரூபாய்க்கு போகக்கூடிய மரத்தை 1500 ரூபாயிக்கு ஏலமெடுத்துவிட்டாரென்றும் ஏலம்போட்டதே ஒருவருக்கும் தெரியாதென்றும், தெரிந்திருந்தால் 5000 ரூபாய்க்கு வருமென்றும் ஓவர்சியர் முதலியவர்கள் ஜமீன்தாருக்கு உள்பட்டுவிட்டார்களென்றும் எழுதினார். இந்த பிடிஷனை விஜாரிக்க ரிவின்யூ இன்ஸ்பெக்டர் ஸ்பெஷலாய் அனுப்பப்பட்டார். ரிவினியூ இன்ஸ்பெக்டர் கிராமத்துக்கு வருவதாக தெரிந்ததும் ஊரில்எல்லோரும் கிராமசாலடிக்கு அவரைப் பார்க்கப்போனார்கள். ரிவின்யூ இன்ஸ்பெக்டர் சாவடியில் உட்கார்ந்திருக்கவும், கிராமத்தாரெல்லோரும் அவர் முன் கைகட்டி நின்றதை பார்த்தால், அவர் டிப்டிகலெக்டரோ என்று தோன்றும். கிராமங்களில் ஜில்லா ஜட்ஜி வந்தால்கூட அவனை லக்ஷ்யம் செய்யமாட்டார்கள்: அவனுக்கு ஒருவேளை அதிகாரமிருந்தபோதிலும், ஒன்றுமறியாத ஜனங்களுக்கு அவன் வருகை லக்ஷியமாயிராது. 30 ரூபா 40 ரூபா வாங்கும் ரிவினியூ இன்ஸ்பெக்டர் வந்துவிட்டால் அவனுக்கு மரியாதை தலைகால் தெரியாமல் ஓடி ஓடிச் செய்வார்கள். ரிவினியூ இன்ஸ்பெக்டர் வந்த வெகு நேரத்திற்குப் பிறகு ராமச்சந்திரய்யர் போய் அவர் பக்கத்திலுட்கார்ந்துகொண்டார். ரிவினியூ இன்ஸ்பெக்டருக்கு மற்றவர்களெல்லாரும் நின்றதைபார்க்க, அதிகமாக அகம்பாவம் உண்டாகிவிட்டது. அவன் ராமச்சந்திரய்யரைப்பார்த்து என்னய்யா உங்களுக்குப் பேரியோர்களெல்லாரும் நிற்கிறார்களேயென்றான். ராமசந்திரய்யர் அவர்களெல்லோரும் தங்களுக்கும் பெரியவர்கள்தான். நாமிருவரும் நிற்கலாம் வாருங்களென்றார். ரிவினியூ இன்ஸ்பெக்டர் இவருடன் பேசி முடியாதென்று கண்டு, நல்லது உமது வாக்குமூலத்தை எழுந்திருந்து சொல்லும் என்றார். ராமச்சந்திரய்யர் தாங்களும் எழுந்திருந்து என்னைக் கேளுங்கள். நானும் எழுந்து சொல்லுகிறேனென்றார். ரிவினியூ இன்ஸ்பெக்டர் காரியம் ஒன்றும் சாயவில்லை. பிறகு ராமச்சந்திரய்யர் ஒன்று சொல்ல அவன் ஒனறு எழுதிக்கொண்டான். ராமச்சந்திரய்யர் தான் சொன்னபடி எழுதினால்தான் கையெழுத்து போடுவேனென்றார். பிறகு ராமச்சந்திரய்யர் இஷ்டப்படியே வாக்குமூலம் கொடுத்தார். ஜமீன்தாரிடத்தில் ரிவினியூ இன்ஸ்பெக்டருக்கு நல்ல வேட்டையென்பதை கேழ்க்கவும் வேண்டுமோ. பிறகு மற்ற சாக்ஷிகளைக் கேட்க எல்லோரும் ஜமீன்தாருக்கும் கோள்சொல்லி முத்துசாமி அய்யருக்கும் பயந்து சொல்ல மாட்டேனென்று சொல்லிவிட்டார்கள். அந்த ஊரில் நாராயணசாமி அய்யரென்பவருக்கு சாம்பசிவனென்ற ஒரு பிள்ளையுண்டு. அவன் சொல் ஒன்று சொன்னால் அதை ஒருபோதும் தவறமாட்டான். தனக்கு ஏதாவது வரவேண்டியிருந்தால் வெகு கண்டிப்பாய் வாங்குவான். தான் கொடுக்கவேண்டியிருந்த போதிலும் வெகு கண்டிப்பாய் கொடுப்பான். சாம்பசிவன் இப்படி இருப்பதால் அவனை ஊரில் அனேகர் தூஷிப்பார்கள். ஒரு தடவை நாராயணசாமி அய்யன் பொய்சாக்ஷி சொல்லி 100 ரூ. சம்பாதித்து அதை சாம்பசிவனிடம்

கொண்டுவந்து கொடுத்தார். சாம்பசிவன் அதை வாங்கி கீழேவிசிரி எரிந்து இந்தக் காசுவந்து நாம் எங்கே கோட்டை கட்டப்போகிறோம். கிராமத்தில் வருகிறபணம் எனக்குப் போதும். இதுகளெல்லாம் வேண்டாமென்றான். நாராயணசாமி அய்யன் அடே பைத்யகாரா நாய்விற்ற காசு குலைக்குமா. கிடக்கிறது நான் எடுத்துக் கொள்கிறேனென்று எடுத்துக்கொண்டு விட்டார். இப்படிப்பட்ட சாம்பசிவனைக் கூப்பிட்டு ரிவினியூ இன்ஸ்பெக்டர் கேட்டார். கேட்டதும் அவன்முழுவதும் ராமச்சந்திரய்யர் சொன்னபடியே சொல்லிவிட்டான். ரிவினியூ இன்ஸ்பெக்டர் ராமச்சந்திரய்யர் மீது இருந்த கோபத்தை வைத்து ஏலம் போட்டது நியாயம் தானென்று எழுதிவிட்டார். ராமச்சந்திரய்யர் பார்த்தார். உடனே கலெக்டருக்கும் இஞ்சினியருக்கும் மனுப்போட்டு அவர்களை கீழ் உத்யோகஸ்தர்களை நம்பாமல் நேரில் வந்து ஜாகாவைப் பார்க்கும்படி கேட்டார். கலெக்டரும் எஞ்சினியரும் அதற்கிணங்கி ஜாகாவை வந்து பார்வையிட்டார்கள். ஜமீன்தார் அவர்களுக்கும் ஆசார உபசாரம் செய்தார். ஜமீன் தாருக்கு இது விஷயத்தில் சிலவானதே 2500 ரூ. க்கு இருக்கும். கலெக்டர் எஞ்சினியர் இவர்கள் பெரிய உத்யோகஸ்தர்களாதலால் அவர்கள் ஜமீன்தாருக்கு கட்டுப்படாமல், எல்லா மரங்களையும் பார்வையிட்டு ஏலம் போட்ட தொகை ரொம்பவும் சொல்பத்தொகை யென்றும், அதுகளை மறு ஏலம்போட வேண்டுமென்றும் உத்தாவு செய்தார்கள். ஜமீன்தாருக்கு வந்த கோபத்திற்கு அளவில்லை. இவ்வளவு செலவு செய்து விடுகிறதா என்று மேலாவில் அப்பீல் செய்தார். அங்கேயும் அசல் உறுதியாகிவிட்டது. பிறகுஏலத்திற்கு வந்ததும் ராமச்சந்திரய்யர் ஊரில் பங்குவீதம் பணம் வசூல்செய்து மரங்களை யெல்லாம் 5000 ரூபாய்க்கு ஏலமெடுத்து பிறகு எல்லோருக்கும் பிரித்துக் கொடுத்தார்.

எஸ். இராமஸ்வாமி அய்யர் பி. ஏ.

---

# Stray Lessons in Civics.

## துரைத்தன விளக்கம்.

### 2. Thumb-Impression.

### 2. கட்டைவிரல் அடையாளம்.

---

I.

தபாற்காரன் :—"லொட்! லொட்! லொட்! லொட்! யாரது ஓய் உள்ளே," என்று ஓர் கூரைக் குடிசையின் கதவைத் தட்டிக் கூப்பிட, அக்குடிசையினின்று ஓர் குடியானவன், யாருங்கோ சாமி அது, கூப்பட்றது என்று வெளிவருகிறான். மறுபடி தபாற்காரன், ஏன் ஓய், உம் பேர் தொப்பஞ்சாமியா ஓய்? அப்படி ஆனால் மோரீசிலிருந்து ஒரு மணி ஆர்டர் உமக்கு வந்திருக்கிறது ஓய்.

குடியானவன் :—என்னாங்கோ வந்திருக்கு? மணி ஆட்டிறதா? அப்படின்னா என்ன?

தபாற்காரன்:—பணம் ஓய்! பணம்! உமக்கு யாரோ மோரீசிலிருந்து ரூபா 25 அனுப்பியிருக்கிறான். உம்பேர் தொப்பஞ்சாமிதானே ஓய்?

குடியானவன் :—ஆஞ்சாமி, ஆஞ்சாமி! எனக்கு எங்கப்பனிட்டபேர் தொப்பஞ்சாமி தான்.

தபாற்காரன் :—ஆனால் இப்படிவா, எங்கே உன் கட்டைவிரலை இப்படிக் கொண்டுவா என்று சொல்லி, மைதடவி இருந்த ஒரு கண்ணாடியின்மேல் குடியானவனது கட்டை விரலைத் தேய்த்து, அதை எடுத்துத் தான் கொண்டுவந்திருந்த மணி ஆர்டர் பாரத்தில் ஒருதரம் உருட்டி மசியாக்கிக்கொண்டு, இருபத்தைந்து ரூபாய் எண்ணிக் குடியானவனிடம் கொடுத்துவிட்டு தன் இனாம் கால் ரூபாயையும் வாங்கிக் கொண்டு போனான்.

குடியானவன் :—எதிர் வீட்டினின்று அப்பொழுதுதான் வந்த தொப்புளானை நோக்கி, அண்ணே! இன்னிக்கி வெள்ளென காடுபோனேன். சோளக்காட்டிலெருந்து ஒரு நரி ஓடிச்சண்ணே. என்ன அதட்டம் வரப்போகுதோ

என்று ஓடிவந்து, கூழுகுடிச்சு கையலம்பினே. யாரோ ஒத்தன், தோல்பரி சின்னதாப் பணணிகழுத்திலே மாட்டிக்கிட்டுவந்து இருபது ரூபாயும், ஒரு அஞ்சு ரூபாயும் குடுத்துட்டுப் போனான். ஆனால் திருப்பிக்கால் ரூபா கேட்டான் குடுத்தேன்.

தோப்புளான்:—சரித்தான் கைப்பிலே என்னண்ணேகரி?

தோப்பஞ்சாமி:—அந்த வேடிக்கைக் கேளேண்ணே! வந்தவன் பணத்தைக் குடுத்துட்டு கட்டைவாலே பிடிச்சிழித்து, வண்டி மசியைத் தடவி ஒரு பலகைத்துண்டு கொணாந்திருந்தான் அதிலெதித்தி, ஒரு சேப்பு மசியாலே எழுதிருந்த காயிதத்திலே தித் திட்டு, அந்த காகிதத்தை மடிச்சிப் பெரியிலே போட்டிக்கிட்டுப் போனான், என்ன பைத்தியக்காரான் அண்ணே! கைலே வண்டிமையைத் தடவி, காகிதத்திலே தடவ இருவத்தஞ்சு ரூபாயா?

தோப்புளான்.—பைத்தியம் போகத்தாண்ணேகாணுது? எப்படி ஆனால் என்ன? உனக்கு நரிகண்டாத்துக்கு அதட்டம் வந்துட்டு தோன்னே?

தோப்பஞ்சாமி:—வந்துட்டுது! வந்துட்டுது! அய்யனார் சாமிக்கு அஞ்சு ரூபாக்கி ஒரு ஆடும், அரை ரூபாக்கி கோழியும் வாங்கி அறுத்து பொங்கல் போடணும் என்று சொல்லி இருவரும் தன் தன் வீடு சென்றார்கள்.

II.

போஸ்டாபீஸ்

போஸ்டு மாஸ்டர்:—ஏன், ஓய் ஷண்முகம் பிள்ளை! அன்று தோப்பஞ்சாமி என்பவனுக்கு ரூ. 25 மணி ஆர்டர் வந்ததே ஓய் அதை என்ன செய்தீர்?

தபாற்காரன் ஷண்முகம் பிள்ளை:—அதை அன்றேகொடுத்து "தம்ப் இம்பிரெஷன்" கூட வாங்கி வந்தேனே?

போஸ்டுமாஸ்டர்:—இன்று காலமே எவனோ வந்து தனக்கு மோரீசிலிருந்து இருபத்தைந்து ரூபாய் மணி ஆர்டர் வரவேண்டுமென்றும், தன் பெயர் தோப்பஞ்சாமி என்றும் சொன்னானே ஓய்?

ஷண்முகம் பிள்ளை:—அதென்னவோ! நான் விசாரித்ததில் நான் பணம் பட்டுவாடா செய்த ஆஸாமி பெயர் தான் தோப்பஞ்சாமி யென்று தெரிந்தது. பணம் பட்டுவாடா செய்தேன்.

போஸ்டு மாஸ்டர்:—நான் வந்தவனை ஒரு போலீஸ் கான்ஸ்டெபிலே அழைத்து வரும்படி அனுப்பி யிருக்கிறேன், அவர்கள் வந்ததும், அவர்களுடன் சென்று, நீர் பணம் பட்டுவாடா செய்த ஆஸாமியைக் காண்பியும்; அவர்கள் அவனை மாஜிஸ்திரேடிடம் கொண்டு செல்வார்கள்.

ஷண்முகம் பிள்ளை:—ஆஹா! அப்படியே!

III.

தோப்பஞ்சாமியும், தோப்புளானும்

தோப்பஞ்சாமி:—என்னண்ணே தொப்புளான்! அன்னைக்கிவந்துதே இருவத்தஞ்சு ரூபா, அதிலே அய்யனாருக்குப் பூசை போட பத்து ரூபா செலவழிஞ்சுது, பாக்கிப் பணத்துக்கு பரிவாங் கிட்டேன்! அதிருக்கிட்டும் அண்ணே! இன்னிக்கி வெள்ளென வெளியே வந்தேன், ஒருபல்லி தலேலேவிழ்ந்திச்சு வள்ளுவன் தெருவிலே வந்துக் கிட்டிருந்தான், கேட்டேன், அவனும் ஆகாசத்தைப் பாத்துட்டு, எதோ கலகம் வரப்போகுது இன்னான்! என்ன கலகம் வரும் அண்ணே? யோசிச்சுச் சொல்லேன்.

தோப்புளான்:—அதென்னவோ அண்ணே? வந்தது வந்துட்டுப் போறதே? நீ வேணுன்னு பல்லியைப் புடிச்சி தலேலே போட்டுக் கிட்டாய்.

இதற்குள் தெருக்கோடியில் போலீஸ்காரனும், ஷண்முகம்பிள்ளையும், வாஸ்தவமான தோப்பஞ்சாமியும் வர, குடியானவன்:—தொப்புளாண்ணே! வந்துடிச்சண்ணே! அந்த சேப்புத்தலேக்காரன் புடிச்சு நோக்கிடுவாண்ணே! இதைத்தாண்ணே பல்லி காட்டிச்சு! என்று சொல்லி ஓட்டம்பிடிக்க, ஷண்முகம்பிள்ளை சுட்டிக் காட்டினதால் தான் தேடிவந்த ஆஸாமி ஓடினவன்தானென்று தெரிந்த கான்ஸ்டேபிலும் பின் தொடர்ந்தோடி அக்குடியானவனைப் பிடித்துப் பின்கட்டாய்க் கட்டிக்கொண்டுவர எல்லோரும் மாஜிஸ்திரேட் கோர்ட்டு சேர்ந்தார்கள்.

IV.

[மாஜிஸ்திரேட் தனது ஆஸனத்தில் வீற்றிருக்க, குடியானவன் பின்கட்டாய் கட்டியிருந்த கையுடன் பெட்டியின்மேல் நிற்கிறான் விசாரணை நடக்கிறது.]

மாஜிஸ்திரேட்:—கைதியை நோக்கி, நீ வேறொருவர்க்கு வந்த பணத்தை உனதென்று வாங்கிக்கொண்டதுண்டா?

குடியானவன்.—மனத்துள் (இல்லையென்றால் யார் கண்டார்கள்) இசைந்து, சாமி நான் ஒண்ணையும் அறியேஞ்சாமி; கும்படரேஞ்சாமி! என்னெவிட்டுடுங்கோ சாமி! ஆஞ்சாமி.

கான்ஸ்டேபில்:—ஏய், கன்னுப்பின்னு என்று பேசாதே! கேட்டதற்கு மாத்திரம் பதில் சொல்.

குடியானவன்:—நான் ஒண்ணையுங்காணேஞ் சாமி! அவ்வளவுதாஞ்சாமி!

மாஜிஸ்திரேட்:—போஸ்டு பியூன் ஷண்முகம் பிள்ளையை நோக்கி, "ஏன்ஓய் ஷண்முகம்பிள்ளே! நீர் இவனிடம் பணம் கொடுத்ததற்கு சாக்ஷி உண்டா? எவ்வாறு ருசுப்பிப்பீர்?"

ஷண்முகம்பிள்ளை:—இவன் தற்குறியாதலால் அவனது "கட்டைவிரற்குறி" இதோ இந்த மணி ஆர்டரில் எடுக்கப்பட்டிருக்கிறது. பரிசோதித்துப்பார்த்தால் தெரிந்துவிடும்.

மாஜிஸ்திரேட்டு:—குமாஸ்தாவை நோக்கி ஓய் சுப்புசேஷய்யரே, ஓர் துண்டுக்காகிதத்தில் கைதியின் கைக் கட்டவிரற்குறியெடும்! பீரோவினின்று அந்த மைக்கிராஸ் கோப்பை எடும்! என அவ்வாறு செய்யப்பட்டு, மாஜிஸ்திரேட்டும் பரிசோதித்துப் பார்த்துத் திருப்தியடைந்து, குடியானவனை நோக்கி, "ஏய், நீ, பிறர் பணத்தை அபகரித்துக்கொண்டு பொய்யும் பேசியபடியால் உனக்கு ஆறுமாதம் கடுங்காவலும் நூறு ரூபாய் அபராதமும் விதித்திருக்கிறேன். கான்ஸ்டேபில்! கொண்டுபோ இவனை ஜெயிலுக்கு."

"சுப்புசேஷய்யரே! இவன் சொத்துக்களை ஜப்தி செய்து எலம்போட்டு அபராதப்பணத்தை வசூல் செய்து கஜானாவில் கட்டவேண்டிய ஏற்பாடு செய்யும்."

சுப்புசேஷய்யர்:—ஆஹா, என, கான்ஸ்டேபில் குடியானவனை நெட்டியைப் பிடித்துத்தள்ளி ஜெயில் கொண்டுபோகிறான்.

V.

[ஆறு மாதத்திற்குப் பிறகு ஜெயிலினின்றும் விடுபட்ட குடியானவனும், அவன் சிநேகிதன் தொப்புளானும் சந்திக்கப் பின்வரும் சம்பாஷணை நடந்தது.]

தொப்புளான்:—என்னண்ணே! இத்தனை நாள் எப்படி கழிச்சே?

குடியானவன்:—அப்படி ஒண்ணும் கஷ்டமில்லே அண்ணே! செயிலிலே என்னை சுகமாத்தான் வச்சிருந்தாங்கோ! கொஞ்சம் வேலை மாத்தரம் அதிகமா வாங்கினாங்கோ, ஆனா, கூழ் ரொம்ப குடுத்தாங்கோ! போத்துக்க கம்பிளி குடுத்தாங்கோ! அடிக்கடி வைத்தியன் வந்து நோயிகீயி வந்திருக்குதான்னு பாத்துட்டுப்போனான்! ஊட்டை விட செயிலே சுகமண்ணே.

தொப்புளான்:—அது சரிதான்! நீ தான் பணத்தை வாங்கிக்கிட்டாயின்னு அந்த கச்சேரிக்காரனுக்கு ஆர் அண்ணே சொன்னாங்கோ? அவனுக்கு எப்படி தெரிஞ்சுது.

குடியானவன்:—அண்ணே! அந்த வேடிக்கையைக் கேளேன்! அந்தப் பசகள் என்னென்ன யுத்திகண்டு கிட்டிருக்காங்கோ! அன்னெக்கு அந்த சின்னப் பரிக்காரனை பைத்தியம் இன்னன்னு சொன்னேம், அவனில்லே பைத்தியம், நாம்பதான் பைத்தியம்! நீ ஒன் கட்டைவிரலை இப்படிக்காட்டு, (காட்ட) இதிலே இந்த கோடு இருக்கோ இல்லேயோ இதிலே வண்டிமை தடவி துக்க, காயிதத்திலே அழுத்தினா அப்படி பொம்மை மாதிரி விழுந்துடராது. அப்படி விழுந்த பொம்மை மறுபடி வேணும் போது பொம்மை எடுத்துரெண்டையும் பார்த்து நான்தான் மைதடவினவன் இன்னு தெரிஞ்சிக்கிறாங்கோ! பின்னே ஒரு கண்ணாடி வச்சிருக்காங்கோ; அது சின்னத்தை பெரிசாகாட்டறது.

தொப்புளான்:—அப்படியா! இது முன்னே தெரியாதபோச்சு. அவுங்கசர்க்காருங்க தெரிஞ்சவங்கதான், உன் மாடெல்லாம் போச்சே. என்ன பண்ணப்போறே?

குடியானவன்:—பண்ணறதென்ன! மாடு வச்சிருந்தா அந்த சேப்புத்தலையான் வாரான், காசு கொடு இன்னு கேக்கறான்! மாட்டுக்குப் புண் என்கிறான், அது தொலேஞ்சுபோறது. கூலிவாங்கிப் பொழைக்கறேன்.

எம். என். கணேசய்யர்.